215. ஐந்தினுேடொன்பதோ டொருபத் தென்னுமவை போலே நூற்றே சொன்ன பத்துநூறுலூராயிர மென்றதும் ஸாபிப்ராயம்.

216. பாட்டுக்கு க்ரியையும் பத்துக்குக் கருத்தும் போலே நூற்றுக்கு உபதேசப்பத்து.

217. பகவத் பக்த பரங்கள் ஆச்ரயண விதிசேஷங்கள்.

218. பரத்வ காரணத்வ வ்யாபகத்வ நியந்த்ருத்வ காருணிகத்வ சரண்யத்வ சக்தத்வ ஸத்யகாமத்வா பத்ஸகத்வார்த்திஹரத்வ விசிஷ்டன் 'மயர்வையறுக்க, தத்த்வவேதநமறப்பற்று ஜ்ஞப்தி பல முக்தி தலைசேர நிஷ்கர்ஷித்து மோக்ஷபலவ்ருத்தி செய்ய வர்த்தித்துப் புருஷார்த்த பலாங்யருசி யொழிந்து விரக்திபல ராகம் கழிய மிக்கு ப்ரேமபலோபாயத்தேபுகுந்து ஸாதநப லோபகாரக் கைம்மாறின்றி க்ருதஜ்ஞதாபலப்ரதிக்ருத மானத்தை யுணர்ந்து ஆத்ம தர்சநபலப்ராப்தி மரணவதியாகப் பெற்றுக் காலாஸத்திபலகதிக்குத் துணை கூட்டின தம் பேற் றைப் பிறரறியப் பத்துத்தோறும் வெளியிடுகிருர்.

---

## நான்காம் ப்ரகரணம்

219. பரபரனுய்நின்ற வளவேழ்வைப்பா மவையுளும்பர் வானவரதிபதி மயர்வறமன்னி மனம் வைக்கத் திருத்தி மறக்குமென்று நல்கி விடாதே மன்ன, அயர்ப்பிலனறுத்தேன் என் சொல்லி மறப்பனே வென்னும்படி தத்த்வஜ்ஞானவர் சுடரடியெம் பிரானை விடாது கண்டாய் நீயும் நானுமென்கிற ஸஹ்ருதயாநு பவம் ஸம்ஸாரிகளுக்குமாம்படி வீடுமினென்று த்யாஜ்யோபா தேய தோஷ குணபரித்யாக ஸமர்ப்பணக்ரமத்தை ஸாலம்பந மந்த்ரமாக வுபதேசித்து எளிதாகவவதரித்துப் பிழைகளை ஸஹித்துப் புரையறக் கலந்து அல்பஸந்துஷ்டனுய் அம்ருதமே ஔஷதமாக்கி நீர்புரையத் தன்னை நியமித்து போகத்தை ஸாத் மிப்பித்து பக்திகணனைகளுக்கு ஒக்கவருமவனுடைய ஸேவைக்கு எளிமையுமினிமையு முண்டு, தொழுதால் அரும்பயனுயதரும், உத்யோகத்தே விளைகளும் மாளும், அவனுரைத்த மார்க்கத்தே நின்று இருபசை மலமற வுணர்வுகொண்டு நலம் செய்வதென்று தாம் மயர்வறமதிநலமருளி பஜநத்திலேசேர்க்கிருர் முதற்பத்தில்.

220. சோராத மூவா வேர்முதலாய் உலகம் படைத்தவனென்கிற சித சித்த்ரமத்ரிவித காரணமானவன் அறியாதனவறிவிக்க உள் ளம் தேறித் தூமனம் மருளிலென்னும் ஜ்ஞாநபலமான ஒளிக் கொண்ட மோக்ஷம் தேடிவாட, உலராமலாவிசேர்ந்து சிக்கனப் புகுந்து ஸம்பந்திகளும் சேர்தல் மாறினரென்ன வாழ்வித்து உபகரிக்கிற நீந்தும் கெடவில் எம்மாவீட்டை உபயாநு குண

மாக்கினவர் ஆச்ரயணீயனுக்குப் பூர்வோக்த பரத்வத்தை ஸ்தாபிக்கிற ஸகலபலப்ரதத்வகாரணத்வ சேஷசாயித்வச்ரிய: பதித்வஸௌலப்யாதிகளைத் திண்ணனனைவதென்று வெளியிட்டு, கள்வாதீர்த்தனென்று வசநப்ரத்யக்ஷங்களும் காட்டிப் புலனைந்தென்று ஸம்ஸார மோக்ஷஸாதந துக்காநந்தரஸம் முன்னாக விதிக்கிற அந்தர்கத குணோபாஸநத்தை மதித்துப் பெருக்கி மூழ்கியழுந்திக் கீழ்மை வலம் சூதும் செய்து இளமை கெடாமல் செய்யும் க்ஷேத்ர வாஸ ஸங்கீர்த்த நாஞ்சலிப்ரதக்ஷிணகதிசிந்தநாத்யங்கயுக்த மாக்குகிறார் இரண்டாம் பத்தில்.

221. முழுதுமாய் எங்கணும் மொழிவற அருவாகி நின்று தோய்விலனும் ஸர்வவ்யாபகன் தீர்ந்தவடியார்களைத் தாளிணைக் கீழ்க் கொள்ளும் தன் படிக்கும் ஏதந்தமாமாயப் புணர்வினைப் பிறப்பழுந்தி அலமருகின்றேன் வேரறவரிந்து எங்காளெங்குவந்து தலைப்பெய்வனென்று கழித்துப் புகும் தம் காதலுக்கும் ஸத்ருசமாகக் கண்டு கொள்ளென்னு மூனமில் மோக்ஷ பலமான முடிச்சோதியி லநுபவத்தாலே நித்யவஸ்து நீடுபெற்று அவச்சேதமற்றவடிமை செய்யவேண்டும்படி ஸர்வாத்மபாவத்தைப் புகழ்ந்து சொல்லிப் பாடியேத்திப் பிதற்றியெழுந்தும் பறந்தும் துள்ளிக் குனித்துத் தடுகுட்டக்கும்பிடுநட்டமிட்டுச் சிரிக்கக் குழைந்து னையும் ப்ரீதியுகள, தம்மடியாரென்ன வுடன்கூடும் ஸாத்யம் வளர, பைகொள் பாம்புபோலே இந்த்ரியவ்ருத்திநியமமறப் பாட வந்த கவியன்றிக்கே படைத்தான் ச்லோக க்ருத்தாய், குறைமுட்டுப் பரிவிடர் துயர் துன்பமல்லல் துக்கம் தளர்வு கேடுகளின்றி அம்ருதாநந்தமக்நரானவர் செய்யதாமரைக் கண்ணன் அமரர் குல முதலென்று அஞ்சாதபடி எளிவருமிணைவனுமென்றவை பரத்வமாம்படி அவனாகும் ஸௌலப்ய காஷ்ட்டையைக் காட்டி வழியைத் தருமவன் நிற்க இழியக் கருதுவதென்னாவது? வேண்டிற்றெல்லாம்தரும், தன்னாகவே கொள்ளும், கவி சொல்லவம்மினென்று முக்தைச்வர்யத்தை முன்னிட்டு ச்வவ்ருத்தியை மாற்றி ஸ்வவ்ருத்தியிலே மூட்டுகிறார் மூன்றாம்பத்தில்.

222. ஈசனை யீச னீசன்பாலென்ன ஏர்கொள் வானத்தும் ஆயே யென்கிற வ்யாப்தி-நிறம்பெறத் தனிக்கோல் செலுத்தும் ஸர்வநியந்தா 'ஒழிவில் காலத்துக்குச் சேர பூர்வ போகங்களை ஓதுமாலெய்தின சாபலத்துக்குச் சேர ஸமகாலமாக்கிப் போதால் வணங்காமை தீர்த்த ப்ரணயித்வத்திலே காதல் மையலேறிய பித்தாய் தேசதூரத்துக்குக் கூவியும் கொள்ளா யென்றது தீர, கண்ட சதிரையும் ஒரு நிலமாகக் காட்ட, வீவிலின்பம் கூட்டினையென்று முக்தபோகமாநஸப்ராப்திபலமான தேவதாந்தராத்மாத்மீய லோகயாத்ரைச்வர்யாக்ஷரங்களில் வைராக்யம், உன்னித்து

உயிருடம்பினால் கொடுவுலகம் வேட்கையெல்லாமொழிந்தே னென்னவுடையரானவர் ஒருநாயகமென்று ராஜ்யஸ்வர்காத் மாநுபவால்பாஸ்திரத்வஸாவதிகத்வாதிகளையும், ஆடு கள்ளி றைச்சி கரும்செஞ்சோறாகிற நிந்த்யங்களாலே இளந்தெய்வத் துக்கு இழைத்தாடும் நிஹீநதையையும், பேசநின்ற தேவதாஜ் ஞாநாசக்திஸாபேக்ஷத்வாதிகளையும் இலிங்கத்து விளம்பும் பாஹ்ய குத்ருஷ்டிமத தமோ நிஷ்டதையையும் சொல்லி, ஓடிக் கண்டீர் கண்டும் தெளியகில்லீர் அறிந்தோடுமின் ஆட்செய் வதே உறுவதாவதென்று விரக்திபூர்வகமாக ஆச்ரயணத்தை ருசிப்பிக்கிறார் நாலாம்பத்தில்.

223. ஆவாவென்று தானே தன்னடியார்க்குச் செய்யும் தொல்லரு ளென்று பரத்வாதிகளையுடையவன் எவ்விடத்தா னென்னும் பாவியர்க்கும் இருகரையுமழிக்கும் க்ருபாப்ரவாஹ முடையவன் பொய் கூத்து வஞ்சக்களவு தவிர முற்றவும் தானாய் உன்னை விட்டென்னப்பண்ணின விரக்திபலபரமாத்மராகம் பேரமர் பின்னின்று கழியமிக்கு யானேயென்ன வாய்ந்தாற்றகில்லாது நீராய் மெலிய ஊடுபுக்கு வளர விஷவ்ருக்ஷபலங்கள் கைகூடி னவர் அடிமை புக்காரையும் ஆட் செய்வாரையும் காண லோகத் வீபாந்தரங்களில் நின்றும் போந்த தேவர் குழாங்களைக் கண்டு காப்பிட்டு ப்ரஹ்லாத விபீஷணர் சொற் கேளாத அரக்கரசுரர் போல்வாரைத் தடவிப் பிடித்து தேசகாலதோஷம் போக எங்குமிடங் கொண்டவர்களை மேவித் தொழுது உஜ்ஜீவியுங் கோள், நீங்கள் நிறுத்துகிறவர்களை தேவதைகளாக நிறுத்தின வனை மேவிப் பரம்புமவரோடொக்கத் தொழில் யுகதோஷ மில்லையாமென்று விஷ்ணுபக்திபராக்கிக் கண்ணுக்கினியன காட்டலாம் படியானார் கண்ணிலே நோக்கிக் காணும் பக்தி ஸித்தாஞ்சநத்தை யிடுகிறார் அஞ்சாம்பத்தில்.

224. என்னையும் யாவர்க்கும் சுரர்க்காய் அடியீர் வாழ்மினென்று கருணையாலே *ஸர்வலோக பூதேப்ய: என்றவை கடலோசை யும் கழுத்துக்கு மேலுமாகாமல் உபாயத்வம் கல் வெட்டாக்குகிற சரண்யன் அஜ்ஞாநாசக்தி யாதாத்ம்யஜ்ஞாநங்க ளளவாலன் றிக்கே அங்குற்றேன் என்னான் புணரா யென்னும்படி மெய் யமர் பக்தி பூம பலமாகவும் அநந்யகதித்வமுடைய தமக்குப் பாதமே சரணாக்க அவையே சேமங் கொண்டு ஏக சிந்தையராய் திர்யக்குக்களையிட்டு ஸ்வாபிப்ராயத்தை நிவேதித்து விளம்ப ரோஷ முபாயத்தாலேயழிய உருகாமல் வரித்ததும் நண்ணி வணங்க பலித்தவாறே ஸப்ரகாரமாக ஸக்ருத்கரணீயமென்று புராண பௌராணிகர் த்யாஜ்யாம்சமாக்கின சிதசித் ப்ராப்யப் ராபகா பாஸங்களைக் கைவலிந்து கைகழலக் கண்டும் எல்லாம் கிடக்க நினையாதகன்றும் ஆளீர் மேவீருநீரென்று ததீய சேஷ

மாக்கியும் புறத்திட்டுக் காட்டியென்று ப்ரஸங்கிக்கில் முடியும்படி
விட்டு, தந்தை தாயுண்ணும்சோறு மாநிதி பூவையாவையு
மொன்றேயாக்கி, தளர்வேனே திரிவேனே குறுகாதோ முதல்
வாவோ வென்னு மார்த்தியோடே திரிவிக்கிரமனைக் குறள்
கோலப்பிரானைய் அடியை மூன்றையிரந்த வன்கள்வன் கண்
முகப்பே அகல்கொள் திசை வையம் விண்ணும் தடவந்த தடந்
தாமரைகளை இணைத் தாமரைகள் காண இமையோரும் வரும்
படி சென்று சேர்ந்த உலகத் திலதத்தே கண்டு அகலகில்லே
னென்று பூர்வ வாக்யமநுஸந்தித்தவர் பிணக்கறத் தொடங்கி
வேதப் புனித விருதி சொன்ன ஸாத்யோபாயச்ரவண ஸசோக
ஸஜாதீயர்க்குத் தந்தனன் மற்றோர் களைகணிலம் புகுந்தே
னென்று ஸ்வஸித்தோபாய நிஷ்டையை உக்த்யநுஷ்டானங்
களாலே காட்டுகிறார் ஆறாம்பத்தில்.

225. எண்ணிலாக் குணங்கள் பாலதுன்ப வேறவன் மாயாப்பல்யோகு
செய்தியென்னு மாச்சர்ய சக்தி யோகத்தாலே தெளிவுற்ற
வர்க்கு ஏற்றரும் வைகுந்தத்தை யருளும் ப்ராபகத்வம் புற்பா
வெறும்பு பகைவனுக்கு மாக்க வல்ல ஸர்வசக்தி, பாதமகல
கில்லாததம்மை அகற்றுமவற்றின் நடுவே யிருத்தக் கண்டு நலி
வான் சுமடுதந்தாய் ஓவென்று ஸாதனபலமான ஆக்ரோசத்
தோடே பழிபிட்டுக் கங்குலும் பகலும் அடைவற்ற ஆர்த்தியைக்
கோயில் திருவாசலிலே முறைகெட்ட கேள்வியாக்கித் தேற்ற
வொண்ணாதபடி தோற்று ஒன்றி நிற்கப் பண்ணின பலாதாநம்
மற்றும் கற்பாரிழவிலே சுவறிப் பழைய தனிமைக் கூப்பீடுதலை
யெடுத்துச் சூழவும் பகைமுகம் செய்ய எடுப்பும் சாய்ப்புமான
க்லேசம் நடக்க உபாயாதிகாரதோஷமொழிய மாயங்கள்
செய்து வைத்த வைசித்திரியைக் கேட்க ஐச்சமாக விருத்தி
உறக்கொண்ட ஸ்வபர ப்ரயோஜநத்தை யருளிச் செய்ய என்
சொல்லி எந்நாள் பார் விண்ணீர் இறப்பெதிர் எதுவுமென்கிற
உபகாரஸ்ம்ருதியோடே தன் சரிதை கேள்வியாகாமல் இன்பம்
பயக்கவிருந்த நிலத்தேவர் குழுவிலே பாட்டுக் கேட்பிப்பதாக
காநகோஷ்டியையும் தேவபிரானறிய மறந்தவர் சரமோபாய
பரானார்க்கு ஹீணகரமது துணித்தான் சரணன்றி மற்றொன்
றிலம் உள்ளித் தொழுமின் என்று ப்ராப்யஸாதநாவதியை
ப்ரீதியாலே ப்ரகாசிப்பிக்கிறார் ஏழாம்பத்தில்.

226. தேவிமார் பணியா நேர்பட்ட நல்ல கோட்பாடு என்னும்படி
சக்தியாலே நித்யமாகக் கல்பித்த பத்நீ பரிஜநாதிகளையுடைய
ஸத்யகாமன் கொண்ட வாக்வ்ருத்தியையும் மறப்பிக்கும்
கலக்கமும் சங்கையும் அச்சமும்தீர, தலைச்சிறப்பத் தந்தவதில்
க்ருதஜ்ஞதாபலப்ரத்யுபகாரமாக வேந்தர் தலைவன் கந்யகாதா
நம்போலே ஆரத்தழுவி அறவிலை செய்த ஆத்ம லாபத்தாலே

அதீவவிளங்கிப் பணைத்து ஜந்மபாசம்விட்டு ஆத்வாரம் ஆளு மாளாரென்று பரிந்து அநுரூபனோடே அமர்ந்து பிரிவில் க்ருபண தசையாகத் துவரும் ஸீதா குணங்களாலே ப்ரீதி வர்த்தித்து. தித்திக்கவுள்ளே உறைந்து கண்டுகொண்டிருந்து அமாநுஷபோகமாக்கினவன் மூன்று தத்துக்குப் பிழைத்த அருவினை நோய் மறுவலிடாமல் சிறியேனென்றதின் பெருமையைக் காட்ட தேஹாதிகளில்பரமாய் நின்றுநினைக்கில் லக்ஷ்மீதுல்யமாய் அவர்க்கே குடிகளாம் பரதந்த்ரஸ்வரூபத்தையநுஸந்தித்தவர் ஸ்வஸாதநஸாத்யஸ்தர் இருகரையராகாமல் மண்ணவரும் வானவரும் நண்ணுமத்தையே குறிக்கொண்மின் உள்ளத்தென்று ப்ராப்யைகபரராக்குகிறார் எட்டாம்பத்தில்.

227. எண்டிசையும் அகல்ஞாலம் எங்கு மளிக்கின்ற ஆலின்மேலென்னும்படி நித்யபோகபாத லீலோபகரணத்தின் லயாதிகளைப் போக்குமாபத்ஸகன் ஆருயிரென்னப்படுத்தின ஆத்மதர்சநபலாநுபவ பரம்பரையைக் கூவுதல் வருதலென்று முடுகவிட்டு ஏகமெண்ணிக் காணக்கருதி எழ நண்ணி நினைதொறுமுருகியலற்றிக் கவையில் மனமின்றிப் பதினாலாண்டு பத்துமாஸமொருபகல் பொறுத்தவர்கள் ஒருமாஸ தின ஸங்க்யையில் படுமது க்ஷணத்திலேயாக இரங்குகிற த்வரைக் கீடாக இனிப் பத்திலொன்று தசமதசையிலே பேறென்று நாட்கடலாகத் தம்பிக் கிட்டதாகாமல் நாளைவதுவைபோலே நாளிடப் பெற்றவர் இம்மடவுலகர் கண்டதோடு பட்ட அபாந்தவாரக்ஷகாபோக்யாஸுகாநுபாய ப்ரதிஸம்பந்தியைக்காட்டி மற்றொன்று கண்ணனல்லாலென்கிற வைகல் வாழ்தலான ஸித்தோபாயம், அதில் துர்பல புத்திகளுக்கு மாலை நண்ணி காலைமாலை விண்டு தேனைவாடா மலரிட்டு அன்பராம் ஸாங்கபக்தி, அதில் அசக்தர்க்குத் தாளடையும் ப்ரபத்தி, அதில் அசக்தர்க்கு உச்சாரணமாத்ரம், ஸர்வோபாய சூந்யர்க்கு இப்பத்தும் பாடியிடும் தெண்டனென்று கீதாசார்யனைப் போலே அதிகாராநுகுணம் நெறியெல்லா முரைக்கிறார் ஒன்பதாம்பத்தில்.

228. சுரிகுழல் அஞ்சனப் புனல்மைந்நின்ற பொல்லாப்புனக் காயாவென்னும் ஆபத்திற் கொள்ளும் காமரூப கந்தரூபத்தாலே ப்ரபந்நார்த்திஹரனானவன் அருள்பெறும்போதணுகவிட்டதுக்குப் பலமான வானேறும் கதிக்கு அண்ட மூவுலகும் முன்னோடிக் கால் விழுந்திடத்தே நிழல் தடங்களாக்கி அமுதமளித்த தயரதன் பெற்ற கோவலனாகையாலே வேடன் வேடுவிச்சி பக்ஷி குரங்கு சராசரம் இடைச்சி இடையர் தயிர்த்தாழி கூனி மாலாகாரர் பிணவிருந்து வேண்டடிசிலிட்டவர் அவன் மகனவன் தம்பி ஆனை அரவம் மறையாளன் பெற்ற ஊமைந்தனாகிற பதினெட்டு நாடன் பெருங்கூட்டம் நடத்து மாத்தனை வழித்துணை

யாக்கி அறியச் சொன்ன ஸூப்ரபாதத்தே துணைபிரியாமல் போக்கொழித்து மீள்கின்றதில்லையென்று நிச்சித்திருந்தவர் ஸஞ்சிதம் காட்டும் தசையானவாறே மூந்துற்ற நெஞ்சுக்குப் பணி மறவாது மருளொழி நகு கைவிடேலென்று க்ருத்யாக்ருத்யங்களை விதித்து நெஞ்சுபோல்வாரைத் தொண்டரென்றழைத்து, வலம் செய்து எண்ணுமின் பேசுமின் கேண்மின் காண்மின் நடமின் புகுதுமென்று கர்த்தவ்யம் ஸ்மர்த்தவ்யம் வக்தவ்யம் ச்ரோதவ்யம் த்ரஷ்டவ்யம் கந்தவ்யம் வஸ்தவ்யமெல்லாம் வெளியிட்டுப் பிணக்கறவைச் சார்வாக நிகமித்து எண்பெருக்கிலெண்ணும் திருநாமத்தின் சப்தார்த்தங்களைச்சுருக்கி மாதவனென்று த்வயமாக்கிக் கரணத்ரயப்ரயோகவ்ருத்தி ஸம்ஸாரிகளுக்குக் கையோலை செய்து கொடுத்துச் செஞ்சொற்கவிகளுக்குக் கள்ள வழி காவலிட்டு மனம் திருத்தி வீடு திருத்தப்போய் நாடு திருந்தினவாறே வந்து விண்ணுலகம் தரவிரைந்து அத்தை மறந்து குடிகொண்டு தாம் புறப்பட்ட வாக்கையிலே புக்குத் தானநகர்களை அதிலேவகுத்துக் குரவை துவரைகளில் வடிவு கொண்ட சபலனுக்கு தேஹதோஷமறிவித்து மாயையை மடித்து வானேதரக் கருதிக் கருத்தின்கண் பெரியனானவனை இன்று அஹேதுகமாக ஆதரித்த நீ அநாத்யநாதர ஹேது சொல்லென்று மடியைப் பிடிக்க, "இந்த்ரியகிங்கரராய்க் குழிதூர்த்துச் சுவைத்தகன்றீர் என்னில், அவை யாவரையும் அகற்ற நீவைத்தவையென்பர்; அது தேஹயோகத்தாலே யென்னில்; அந்நாள் நீதந்த சுமடென்பர்; முன்செய்த முழுவினையாலே யென்னில், அது துயரமே உற்ற விருவினை உன் கோவமுமருளுமென்பர்; ஈவிலாத மதியிலே னென்னுமம்மதன்றோ கர்த்ருத்வ போக்த்ருத்வங்களென்னில். ஆங்காரமாய்ப் புக்குச் செய்கைப் பயனுண்பேனும் கருமமும் கருமபலனுமாகிய நீ கர்த்தா போக்தாவென்பர்; யானே எஞ்ஞான்று மென்றத்தாலேயென்னில்; அயர்ப்பாய்ச் சமயமதி கொடுத்து உள்ளம் பேதம் செய்கை உன் தொழிலென்பர்; ஜீவப்ரக்ருதிசைதந்யம் நீங்கும் வ்ரத ஹேது: அகமேனியிலழுக்கறுக்கை அபிமாநிக்ருத்யம்; தான் நல்கும் பந்தம் நிருபாதிகம். ஸௌஹார்தம் எஞ்ஞான்றும் நிற்கும்; பிணக்கிப் பேதியாத ஜ்ஞாநாதி வைகல்யமில்லை; ஏக மூர்த்தியில் அல்லல்மாய்த்த யத்நபலித்வங்கள் நம்மது; நாம் தனி நின்ற ஸ்வதந்த்ரரென்று அவனே அறிந்தனமே யென்னும் ஸர்வஜ்ஞரிவர்; நெறிகாட்டி அருகும் சுவடும் போலே இதுவும் நிருத்தரமென்று கவிழ்ந்து நிற்க, அமந்த்ரஜ்ஞோத்ஸவ கோஷம் போலே ஏறப் பெறுகிற எழுச்சியை ஸூசிப்பிக்கிற மேகஸமுத்ர பேரீகீத காஹளசங்காசீஸ்ஸ்துதி கோலாஹலம் செவிப்பட்டவாறே ஸாக்ஷாத்கரித்த பரப்ராப்திக்குத் தலைமிசையாய் வந்த தாள்களைப் பூண்டு போகாமல் தடுத்துத் திரு

வாணையிட்டுக் கூசம் செய்யாத செய்திப் பிழை, பற்றுக்கொம் பற்ற கதிகேடு போரவிட்ட பெரும்பழி, புறம்போனால் வருமிழவு, உண்டிட்ட மூற்றிம்பு, அன்புவளர்ந்த அடியுரம்; உயிருறவு முதலளவு துரக்கைகளாலே பெருவாணை அல்லவாக்கின பேரவாளுளப்படியாம்படி கடல் போன்ற ஆதாரத்தோடே சூழ்ந்து தாபங்களை ஹரித்தமையை வெளியிடுகிறார் பத்தாம்பத்தில்.

229. உருமையோடே உற்றேனுக்காதொழிந்தது நாடுதிருந்த நச்சுப் பொய்கையாகாமைக்கு ப்ரபந்தம் தலைக்கட்ட வேர்சூடுவார் மண் பற்றுப்போலேயென்னுமவற்றிலும் இனி யினியென்று இரு பதின்கால் கூப்பிடும் ஆர்த்தியதிகார பூர்த்திக்கென்னுமது முக்க்யம்.

230. கமலக்கண்ணனென்று தொடங்கிக் கண்ணுள் நின்றிறுதி கண்டேனென்ற பத்தும் உட்கண்ணாலேயாய் காண்பானவாவுதல் அதிலிரட்டியாகையாலே கண்டுகளிப்ப வளவும் பரஜ்ஞாநகர்ப்ப பரபக்தி.

231. இருந்தமை யென்றது பூர்ண ப்ரஜ்ஞாநம்.

232. முடிந்த அவாவென்றது பரமபக்தி.

233. இவை ஜ்ஞாநதர்சநப்ராப்த்யவஸ்த்தைகள்.

234. அவித்யாநிவர்த்தக ஜ்ஞாந பூர்த்திப்ரத பகவத்ப்ரஸாதாத் மோக்ஷலாப மென்கை மயர்வற வீடுபெற்றவென்ற ப்ரபந்தை கார்த்த்யம். ... ... .... ... ... *

ஆசார்யஹ்ருதயம் முற்றிற்று.

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் திருவடிகளே சரணம்.

ஜீயர்திருவடிகளே சரணம்.

---

(முடிவில் அநுஸந்திக்கும் தனியன்)

தந்தருளவேணும் தவத்தோர் தவப்பயனாய்
வந்த முடும்பை மணவாளா—சிந்தையினால்
நீயுரைத்த மாறன்மறைவின் பொருளனைத்தென்
வாயுரைத்து வாழும் வகை.

---

ஸ்ரீ

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யர் எழுதிய

# ஆசார்யஹ்ருதய பாடபரிஷ்கார்ரம்.

ஆசார்யஹ்ருதயக்ரந்த ப்ரபாவம் ப்ரதிபாதயந்,
தத்பாடாநாம் பரிஷ்காரம் ப்ரதர்சயிது முத்ஸஹே.

ஸ்ரீ வைஷ்ணவஸம்ப்ரதாயத்தில் தோன்றியுள்ள நூல்களுள் ஆசார்யஹ்ருதயம் என்பது மிகச்சிறந்தது. நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழிக்கு "தெள்ளியதா நம்பிள்ளை செப்புநெறிதன்னை, வள்ளல் வடக்குத் திருவீதிப்பிள்ளை, இந்த நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்தது, ஈடுமுப்பத்தாறுயிரம்" என்று உபதேசரத்தினமாலையில் மணவாளமாமுனிகள் அருளிச்செய்தபடி மிகச் சிறந்த வியாக்கியானமாகிய [பகவத்விஷயமென வழங்கப்படுகிற] ஈடு முப்பத்தாறுயிரப்படியை அருளிச்செய்தவரான வடக்குத்திருவீதிப்பிள்ளை யென்னுமாசிரியர்க்கு இரண்டு திருக்குமாரர்கள் தோன்றியிருந்தனர். அவர்களுள் மூத்தவர் பிள்ளை லோகாசார்யரென்று உலகம் போற்ற நின்ற ஆசிரியராவர். இளைய திருக்குமாரர் அழகிய மணவாளப்பெருமாள்நாயனர் என்னுமாசிரியர். இவ்விருவரும் இவ்வுலகுக்குச் செய்தருளிய பேருதவி கைம்மாறிலாதது. ஸ்ரீவசநபூஷணம், மும்முக்ஷுப்படி (திருமந்த்ரார்த்தம்) முதலிய அஷ்டாதச (18) ரஹஸ்ய திவ்யக்ரந்தங்களை யருளிச்செய்தவர் மூத்தவரான பிள்ளைலோகாசார்யர். அவருடைய திருத்தம்பியாரான அழகியமணவாளப்பெருமாள் நாயனர் என்னுமிவர் அருளிச்செய்தவை— திருப்பாவைக்கு ஆறுயிரப்படி வியாக்கியானம், அமலனுதிபிரான் வியாக்கியானம், கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியானம், பட்டோலை யென்பதோர் ரஹஸ்யம், ஆசார்யஹ்ருதயம் முதலியன.

இவற்றுள் ஆசார்யஹ்ருதயமென்னும் நூலின் பெருமையைப் பேசவும் அதில் தோன்றியுள்ள பாடப் பிறழ்வுகளைப் பரிஷ்கரிக்கவும் நாமிப்போது முன் வருகிறோம். இவ்வரிய பெரிய நூலின் பெயரைக் கேள்விப்படாதவர்கள் பலர் இருக்கலாம். கேள்விப்பட்டவர்களிலும் பலர் "ஸ்ரீவசனபூஷணம் முதலிய மற்ற நூல்களைப்போல் இதுவுமொரு நூல்" என்று இவ்வளவே க்ரஹித்திருக்கக்கூடும்; நூலினுள் இறங்கி ஆராய்ச்சிசெய்திரார்கள். இந்நூலில் பரிசயமுள்ளவர்களும் பெரும்பாலர் இதன் அருமை பெருமைகளை ஆழ்ந்து அறியப்பெற்றிலர் என்றால், இப்பேச்சில் யாரும் குறைகூற நேராது. "மற்ற நூல்களைப் போலல்லாமல் இது வொரு விலக்ஷணமான நூல்; மிகச்சிறந்த நூல்" என்று இவ்வளவு க்ரஹித்திருப்பவர்கள் சிலருளர். அந்தச் சிறப்பு எப்படிப்பட்டதென்பதை உலகமெல்லாமறிய நன்குவிளக்கிக் காட்டவேணுமென்னுமாசை நமக்கு எழுந்துளது.

இவ்வுலகில் அன்றுதொட்டு இன்றுறுதியாகத் தோன்றியுள்ள திவ்ய நூல்களில் ஆசார்யஹ்ருதயத்திற்கொப்பானதொரு க்ரந்தம் இதுவரையில் தோன்றவுமில்லை, இனித் தோன்றப்போகிறதுமில்லை. உபநிஷத்துக்கள், இதிஹாஸ புராணங்கள், ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகள் எல்லாம் ஒருங்கே திரண்டு இந் நூலாக வடிவெடுத்திருக்கின்றதென்பது உண்மையுரை.

ஆசார்யஹ்ருதயம் என்கிற சொல்லானது 'ஆசார்யருடைய திருவுள்ளம்' என்னும் பொருள்பெற்றுள்ளது. வைதிக ஸந்தானத்திற்கு ப்ரதம ஆசார்யரான நம்மாழ்வார் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களில் அவருடைய திருவுள்ளக் கருத்துகளைத் தெளிய வெளியிடுகையாலே, இந் நூலுக்கு ஆசார்யஹ்ருதயமென்று பெயராயிற்று என்பர் பெரியோர். நம்மாழ்வாரென்கிற ஒரு ஆசார்யருடைய திருவுள்ளத்தை மாத்திரம் வெளியிடாமல் ஸகல பூர்வாசார்யர்களுடையவும் திருவுள்ளக்கருத்துகளை யெடுத்துரைப்பது இந் நூலாதலால் "ஆசார்யர்களின் ஹ்ருதயம்" என்கிற பொருளும் பொருந்தும்.

இந் நூலின் அர்த்தங்கள் மிகவும் அதிசயிக்கத் தக்கவை யென்பது ஒருபுற மிருக்க, அர்த்தத்திற்காட்டிலும் சொல்தொடைதானே மிகவும் இனிதாயிருக்கு மென்பது, இதில் ஸ்வல்ப பரிசயம் பண்ணினவர்களுக்கும் எளிதாகத் தெரியவரும். *செவிக்கினிய செஞ்சொல்* என்று திருவாய்மொழிக்கு ப்ரஸித்தியிருந்தாலும் உண்மையாகச் செவிக்கினிய செஞ்சொல் இந் நூலென்றேயாகும். இந் நூலின் அரிய பெரிய பொருள்களை உள்ளவாறு உணரப்பெறுவதும் நெஞ்சில் தரிக்க வைத்துக்கொள்வதும் எப்படிப்பட்ட மாஞானியர்க்கும் எளிதன்று. நாடோறும் இதில் மூலத்திலும் வியாக்கியானத்திலும் அவகாஹித்துக்கொண்டேயிருப்பார்க்கும் இதன் ஆழ்பொருள்கள் அறியவரியனவே.

இந் நூலில் ஒவ்வொரு சொல்லும் பெரும்பாலும் பிரமாணவசனத் தொகுதியேயாகும். ஆசிரியர் தம்முடைய சொந்த வாக்காக எழுதும் வார்த்தைகள் மிகச் சிலவே. நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து வார்த்தைகள் வடமொழி மேற்கோள்களும் தென்மொழி மேற்கோள்களும் வடிவெடுத்தவை; இங்ஙனே நாம் எழுதிவிடுவதனால் பயனில்லை. இதை விளக்கிக் காட்டி வாசகர்களுக்குப் பேரின்ப மளிக்கின்றோம். இந் நூலில் ஒவ்வொரு மஹாவாக்யமும் சூர்ணை யெனப் படுகின்றது. முதல் சூர்ணையொன்றைமாத்திரம் எடுத்துக்கொண்டு அது அமைந்திருக்கு மழகை விவரித்துக் காட்டுகின்றோம்.

"காருணிகனான ஸர்வேச்வரன் அறிவிலாமனிசர் உணர்வென்னும் சுடர் விளக்கேற்றிப் பிறங்கிருள் நீங்கி மேலிருந்த நந்தா வேதவிளக்கைக் கண்டு நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின ப்ரதீபமான கலைகளை நீர்மையினாலருள்செய்தான்"

இது இந் நூலின் முதல் சூர்ணை. இதில் நூலாசிரியருடைய சொந்தமான சொல் ஒன்றுகூட இல்லை. சொல்தொடை மாத்திரமே இவருடையது. சொற்கள் யாவும் பூருவர்களின் திவ்ய ஸூக்திகளிலிருந்து அற்புதமாகத் திரட்டப்பட்டுள்ளன.

1. பட்டரென்கிற ஆசிரியருடைய வடமொழி ச்லோகமொன்று; 2. திருமாலைப் பாசுர மொன்று; 3. பேயாழ்வார் பாசுர மொன்று; 4. பூதத்தாழ்வார் பாசுர மொன்று; 5. திருமங்கையாழ்வார் பாசுரங்கள் ஐந்து; 6. பெரியாழ்வார் பாசுர மிரண்டு; 7. நம்மாழ்வார் பாசுர மிரண்டு; 8. திருமழிசை யாழ்வார் பாசுர மொன்று. ஆக இவ்வளவு திவ்ய ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு இந்த வொரு சூர்ணை நிருமிக்கப்பட்டுள்ளது. இதில் அடங்கியுள்ள அந்த ஸ்ரீஸூக்திகளை விவரித்துக் காட்டுகிறோம் காண்மின்;

1. * ஹார்த்தும் தமஸ் ஸதஸதீ ச விவேக்துமீசோ மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி * இது பட்டருடைய திருவாக்கு.

2. * அறிவிலா மனிசர் * இது திருமாலைப் பாசுரம்.

3. *உய்த்துணர்வென்னு மொளிகொள் விளக்கேற்றி* இது பேயாழ்வார் பாசுரம்.

4. * ஞானச் சுடர்விளக் கேற்றினேன் * இது பூதத்தாழ்வார் பாசுரம்.

5. * பிறங்கிருள் நிறங்கெட * * நந்தா விளக்கே* *மறையாய் விரிந்த விளக்கை* *வந்து பன்னுகலை நால்வேதப் பொருளை யெல்லாம் பரிமுகமாயருளிய* *கலைகளும் வேதமும் நீதிநூலும்* இவை யைந்தும் திருமங்கையாழ்வார் பாசுரங்கள்.

6. *பின்னிவ்வுலகினில் பேரிருள் நீங்க* *வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு* இவை பெரியாழ்வார் பாசுரங்கள்.

7. *இவையன்றே நல்ல இவையன்றே தீய* *மிக்கஞானமூர்த்தி யாய வேதவிளக்கினைக் கண்டு * இவை நம்மாழ்வார் பாசுரங்கள்.

8. *துளக்கமில் விளக்கமாய்* இது திருமழிசையாழ்வார் பாசுரம்.

ஆக இத்தனை பாசுரங்களிலுள்ள சொற்களை, தாம் கூற விரும்பிய பொருளுக்குத் தக்கவாறு கண்டங்களாக வெடுத்துத்திரட்டி ஒரு சூர்ணையமைத் துள்ள அதிசயம் என்னே!.

இந்த முதல் சூர்ணையில் இவ்வாசிரியர் வெளியிட விரும்பிய விஷயம் யாதெனில், சிறிதும் விடாமல் அதை நம்முடைய வாக்கியமாக எழுதிக் காட்டுகிறோம்;

அறிவிலிகள், ஞானவிளக்கையேற்றி நிபிடமான அக்விருள் நீங்கப்பெற்று எம்பெருமானுகிற விளக்கைக்கண்டு நன்று தீதுகளைப் பகுத்துணருகைக்காக, அகாரமாகிற விளக்கில் கொளுத்தின சாஸ்த்ரங்களாகிற விளக்கைப் பேரருளாளப்பெருமான் அருள் செய்தான்.

என்கிறவிதுவே இந்த முதல் சூர்ணையின் விஷயம். இதைத் தம் திருவாக்கால் அமைத்தருளாமல் முன்னோர்களது மொழிகளைக்கொண்டே வெகு அழகாக வெளியிட்டுள்ளார். 'பகவான் பரமகருணையாலே சாஸ்த்ரங்களை உபகரித்தான்' என்கிற விஷயத்தைத் திருமங்கையாழ்வார் ஒரு பாசுரத்தாலும், பட்டர் ஒரு ச்லோகத்தாலும் கூறியிருக்கையாலே, அவ்விரண்டு மேற்கோள்களையும் எடுத்தாள விரும்பிய ஆசிரியர், ஆதியில் காருணிகனுன ஸர்வேச்வரன் என்றதனால் "மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி" என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியையும், முடிவில் நீர்மையினலருள்செய்தான் என்றதனால் "கலைகளும் வேதமும் நீதி நூலும் கற்பமும் சொற்பொருள்தானும், மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினலருள் செய்து" என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்தையும் தொகுத்தருளினர்,

பகவான் இப்படிப்பட்ட பேருதவி செய்தருளினது ஜ்ஞானஹீனர்களான மனிசர்களுக்காகவென்று கூற விரும்பிய ஆசிரியர் அதையும் தமது சொல்லால் சொல்லாது அறிவிலா மனிசர் என்றிட்டுச் சொன்னது "அறிவிலா மனிசரெல்லாம்" என்கிற திருமாலைப்பாசுரத்தை நினைப்பூட்டவே. மனிசர் அறிவில்லாதவர்கள் என்பதற்கு ஒரு மேற்கோள் காட்டவேண்டிய அவசியமில்லையானுலும், கூடுமான வரையில் பெரியோர்களின் ஸ்ரீஸூக்திகளையிட்டே பணிக்கவேணுமென்று இவ்வாசிரியரின் திருவுள்ளமென்பது இதனால் நன்கு விளங்கும். "முன்னோர் மொழி பொருளேயன்றி அவர் மொழியும் பொன்னேபோல் போற்றுவம்" என்ற நன்னூல் இங்கு நினைக்கத்தக்கது.

இங்கு ஒரு சிறிய சங்கை ஆராய்ச்சிப் புலவர்களுக்குத் தோன்றக் கூடியதுண்டு; அதாவது—முதலில் காருணிகனுன என்றிட்டது "காருணிகோ ததாதி" என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியைக் காட்டுதற்கேயன்றோ; அந்த பட்டர் ச்லோகத்தில் "விவேக்தும் ஈச: ததாதி" என்றிருக்கிறதே யொழிய ஸர்வேச்வர: என்றில்லையே. ஆகவே, "காருணிகனுன ஈசன்" என்று இவ்வாசிரியர் பணித்திருக்கவேண்டுமே; 'ஸர்வேச்வரன்' என்று வேறுசொல்லையிட்டுப் பணித்தது ஏன்? என்பதாம். இந்த சங்கைக்குப் பரிஹாரம் வெகு நுட்பமான ஆராய்ச்சியினல் பெறவேண்டியிருக்கின்றது. கேண்மின்; பகவான் சாஸ்த்ரங்களை யுதவினன் என்கிற விஷயத்தை பட்டர்போலவே திருமங்கையாழ்வாரும் கூறியுள்ளாரென்றும், அவருடைய பாசுரமும் இதே சூர்ணையில் தொகுக்கப்பட்டுள்ளதென்றும் கீழே தெரிவித்தோமல்லவா? அந்தப் பாசுரத்தில் 'கலைகளும் வேதமும் நீதிநூலும்...வானவர்க்கும்

பிறர்க்கும் நீர்மையினால் அருள்செய்து என்று, விண்ணுலகத்தாரோடு மண்ணுலகத்தாரோடு வாசியற ஸர்வ ஜனங்களுக்கும் அருள்செய்ததாகச் சொல்லியிருப்பதைத் திருவுள்ளத்திற் கொண்டு அதையும் காட்டவேண்டி ஸர்வேச்வரன் என்றாரென்க. வியாக்கியானத்தில் காட்டப்படாமலிருந்தாலும் இப்படி நுட்பமாக ஆய்ந்து அறியவேண்டியவையும் இந்நூலில் பலவுள்ளன. இடையில் தோன்றிய சங்கையும் பரிஹாரமும் நிற்க. இனி ப்ரக்ருத விஷயத்திற்செல்வோம்.

இதற்குமேல், ஞான விளக்கையேற்றி என்று கூறியிருந்த ஆசிரியர் அதையும் தாமது சொல்லால் சொல்லாமல் ஆழ்வார்பாசுரத்தாலேயே சொல்லுமிடத்து, அவ்விஷயத்திற்குப் பூதத்தார் பாசுரமொன்றும், பேயார் பாசுரமொன்றுமாக இரண்டு மேற்கோள்கள் காட்டத் திருவுள்ளம்பற்றி 'உணர்வென்னும் சுடர் விளக்கேற்றி என்ற சொல்தொடர் அமைத்திருப்பதானது மிகவற்புதம். இதனால் *உய்த்துணர் வென்னு மொளிகொள் விளக்கேற்றி வைத்து* என்கிற பேயார் பாசுரமும், *ஞானச் சுடர் விளக்கேற்றினேன்* என்கிற பூதத்தார் பாசுரமும் நன்கு காட்டப்பட்டன. "உணர்வென்னும் விளக்கேற்றி" என்றோ "ஞான விளக்கேற்றி" என்றோ மூலமியற்றியிருந்தாலும் இங்கு ஆசிரியர்க்கு விருப்பமான பொருள் தோன்றக் குறையில்லை. ஆனாலும், மேற்கோள்களை அதிகமாகக் காட்டியருளவேணுமென்கிற விருப்பமே இப்படிச் சொல்தொடரை அமைக்கப் பண்ணிற்று.

இந்த ஸந்தர்ப்பத்தில் மிக முக்கியமாக இங்குத் தெரிவிக்கவேண்டியதொன்றுண்டு; இந்நூலைக் கண்டபாடஞ்செய்து தரித்தாலொழியப் பயனில்லை. அப்படிக் கண்டபாடம் செய்திருப்பவர்கள் சிலரே யாவர். அவர்களும் பலவிடங்களில் தவறான—மிகத் தவறான பாடங்களை அந்த பரம்பரையாய் ஆதரித்துள்ளாரென்பதைப்பற்றி மேலே விரிவாக வரையப் போகிறோம். இங்கும் சிறிது தெரிவிக்கிறோம். இப்போது நாமெடுத்து விவரித்த இவ்விடத்தில் "உணர் வென்னும் சுடர்விளக்கேற்றி" என்று பாடம் பண்ணாமல் 'உணர்வெனும் சுடர்விளக்கேற்றி' என்றே பலரும் பாடம்செய்துள்ளார்கள். ஆசிரியர் எந்த ஆழ்வார் ஸ்ரீஸூக்தியைக் கொண்டு இவ்வாக்கியம் இட்டருளினரோ அந்த ஸ்ரீஸூக்தியில் "உணர்வென்னும்" என்றுள்ளதேயல்லது "உணர்வெனும்" என்று (தொகுத்தல் விகாரமாக) இல்லை; திருமங்கையாழ்வாருடைய 'வாடினேன் வாடி' யென்கிற பாசுரத்தில் "உணர்வெனும் பெரும்பதம்" என்றுள்ளது. ஆனால்; அந்தப்பாசுரத்திற்கு இங்கு ப்ரஸக்திலேசமுமில்லை. "உய்த்துணர் வென்னு மொளிகொள் விளக்கேற்றி" என்கிற பேயாழ்வாருடைய வெண்பாவே இங்கு விஷயமாதலாலும், அதில் தொகுத்தல் விகாரமில்லாமையாலும், இல்லாத விகார மொன்றைப் புகுத்த யார்க்கும் அதிகாரமில்லாமையாலும் "உணர்வென்னும் சுடர்விளக்கேற்றி" என்பதே சுத்தமான பாடம். அந்தபரம்பரையினால் வந்த தவறான பாடம் தவிர்க்கத் தக்கது-என்பது இங்கு ப்ராஸங்கிகமாக வுணர்த்தலாயிற்று. இனி ஆரம்பித்த விஷயத்திற் செல்வோம்.

பிறகு, நிபிடமான அகவிருள் நீங்கப்பெற்று என்று ஆசிரியர் தாம் கூற விரும்பிய விஷயத்தையும் ஆழ்வார் பாசுரத்தாலேயே சொல்லப்புகுந்து, இதற்கும்

இரண்டு ஆழ்வார்களின் பாசுரங்களைக் காட்டவேண்டிப் "பிறங்கிருள் நீங்கி" என்ற சொல்தொடர் அமைத்தது பரம சாதுர்யம். இதில் இரண்டு ஆழ்வார்களின் பாசுரங்கள் அமைக்கப்பட்டுள்ளன. *பின்னும் வானவர்க்கும் முனிவர்க்கும் நல்கிப் பிறங்கிருள் நிறங்கெட* என்பது திருமங்கையாழ்வாரருளிச்செயல். *பின்னிவ் வுலகினில் பேரிருள் நீங்க* என்பது பெரியாழ்வார் பாசுரம். இவ்விரண்டு பாசுரங்களையும் சேரத் திரட்டியிருக்கு மழகு காண்மின்; இங்கு மூலம் "பிறங்கிருள் நீங்கி" என்றுள்ளது. பிறங்கு என்பதனால் திருமங்கையாழ்வார் பாசுரத்தைக் காட்டினர். 'நீங்கி' என்பதனால் பெரியாழ்வார் பாசுரத்தைக் காட்டினர். 'பிறங்கிருள் நிறங்கெட்டு' என்றாவது 'பேரிருள் நீங்கி' என்றாவது மூலமியற்றி யிருந்தால் ஆசிரியர்க்கு விருப்பமான பொருள் தோன்றாமல் போகாது, தோன்றியே தீரும்; ஆனாலும், இரண்டு மேற்கோள்கள் காட்டின சுவை தோன்றாதன்றோ? பலமேற்கோள்கள் காட்டப்பட்டனவென்பது மேற்பார்வையில் சிறிதும் தெரியாதபடி அமைத்திருப்பதும் ஒரு ஆச்சரியம்! இதுவே இந்நூலுக்கு ஒவ்வொரு சூர்ணையிலும் அஸாதாரணமான சிறப்பு என்றுணர்க.

இதற்குமேல் "எம்பெருமானாகிற விளக்கைக் கண்டு" என்று ஆசிரியர் சொல்ல நினைத்த விஷயத்தையும் ஆழ்வார்பாசுரத்தாலேயே சொல்லுமிடத்து, எம்பெருமானை விளக்காகக் கூறுவது பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், ஆகிய மூவருடைய பாசுரங்களினாலும் ஸித்திக்கின்றதென்று காட்டவேண்டி "மேலிருந்த நந்தா வேத விளக்கை" என்று சொல்தொடர் அமைத்தது வெகு அற்புதம். *வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு* என்றவர் பெரியாழ்வார். *நந்தாவிளக்கே* என்றவர் திருமங்கையாழ்வார். *மிக்கஞான மூர்த்தியாய வேதவிளக்கினை கண்டு* என்றவர் நம்மாழ்வார். இம்மூன்று மேற்கோள்களும் விளங்குமாறு "மேலிருந்த நந்தா வேதவிளக்கைக்கண்டு" என்று தொடுத்தது மற்றொருவர் மதிக்கும் நிலமன்று. மேலிருந்த விளக்கை யென்றோ, நந்தாவிளக்கை யென்றோ, வேதவிளக்கை யென்றோ, ஏதேனுமொரு விதமாகப் பேசியிருந்தாலும் போதும்; ஆனால், மூன்று மேற்கோள்கள் காட்டினவழகு அப்போது விளங்காதன்றோ? இதிலும் பலமேற்கோள்கள் காட்டப்பட்டன வென்பது தெரியாதபடியே சொல்தொடை அமைந்துள்ளது.

இதற்குமேல் நன்றுதீதுகளைப் பகுத்துணருகைக்காக வென்று தாம் சொல்ல நினைத்த விஷயத்தையும் இரண்டு மேற்கோள்களால் கூறவிரும்பிய ஆசிரியர் "நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு" என்று சொல்தொடர் அமைத்தார். இதில் *இவையன்றே நல்ல இவையன்றே தீய* என்ற நம்மாழ்வார் பாசுரமும், *ஸதஸதீச விவேக்தும்* என்ற பட்டர் ச்லோகமும் கையாளப் பட்டிருப்பது காண்க. நல்லதும் தீயதுமறிகைக்கு என்றோ, ஸதஸத்துக்களை விவேகிக்கைக்கு என்றோ மூலமியற்றியிருக்கலாம்; ஆனால், அப்போது ஒரு ப்ரமாணவசனமே மேற்கொண்டதாகும். அவ்வளவில் த்ருப்தியடைபவரல்லரே இவ்வாசிரியர்.

இதற்குமேல் "அகாரமாகிற விளக்கில்" என்று சொல்ல நினைத்த ஆசிரியர், அகாரத்தை விளக்காகக் கூறுவது திருமங்கை யாழ்வாருடையவும் திருமழிசையாழ்வாருடையவும் பாசுரங்களினால் ஸித்திக்கின்றதென்று காட்ட வேண்டி மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின என்று சொல் தொடர் அமைத்தார். *மிக்கானை மறையாய்விரிந்த விளக்கை* என்றருளிச் செய்தவர் திருமங்கையாழ்வார்; *தோன்று சோதி மூன்றுமாய்த் துளக்கமில் விளக்கமாய்* என்றருளிச் செய்தவர் திருமழிசையாழ்வார்; இவ்விரண்டு மேற்கோள்களும் உணரலாம்படி "மறையாய்விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின" என்று மூலமமைத்தது மற்றொருவருடைய சிந்தைக்கும் கோசரமன்று, மறையாய்விரிந்த விளக்கிலென்றோ துளக்கமில் விளக்கிலென்றோ இயற்றியிருந்தாலும் குறையில்லை. ஆனால், அப்போது இச்சுவை காணமுடியாததாகும்.

இந்த முதல் சூர்ணையில். ஞானத்தை ஒரு விளக்காகவும், எம்பெருமானை ஒரு விளக்காகவும், அகாரத்தை ஒரு விளக்காகவும் பேசிவந்தபடிக்கிணங்க, சாஸ்த்ரத்தையும் ஒரு விளக்காகப் பேசவேண்டி ப்ரதீபமானகலைகளை யென்று மூலமியற்றியுள்ளார். இதிலுள்ள 'ப்ரதீபமான' என்கிற விசேஷணமானது பட்டர் ஸ்ரீஸூக்தியிலிருந்து கொள்ளப் பட்டது (*மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி* என்றாரே அவர்.) அதற்குமேல் கலைகளை என்கிற விசேஷ்யமானது *கலைகளும் வேதமும் நீதிநூலும்* *பன்னுகலை நால்வேதம்* என்ற திருமங்கையாழ்வார் பாசுரங்களிலிருந்து கொண்டு கூறப்பட்டது.;'

இந்த சூர்ணையில், ஆரம்பத்தில் திருவுள்ளம் பற்றின காருணிகோததாதி என்ற பட்டர் ஸ்ரீஸூக்திக்குச் சேர நீர்மையினலருள் செய்தா னென்று திருமங்கையாழ்வார் பாசுரத்தினால் முடித்ததானது மிகவும் ரஸிக்கத்தக்கது.

இன்னமும் பல விசேஷங்கள், இதிலே உய்த்துணரவேண்டிய மருமங்களாக வுள்ளன; அவற்றையும் உணர்த்துகிறோம். "கண்ணன் பின்மாலையெழுந்து கோவிலை வலம்வந்து குளஞ்சென்று நீராடித் தாமரைப் பூப் பறித்துவர எண்ணங் கொண்டு இரவில் படுத்துக் கொண்டான்" என்று ஒருவர் சொன்னால், இந்த மஹாவாக்யத்தில் காணப்படுகிற எழுந்து. வலம்வந்து. சென்று. நீராடி. பறித்து என்கிற வினையெச்சங்கள் இறந்தகால வினையெச்சங்களாக இருந்தாலும் எதிர் காலப் பொருள்படுமேயன்றி இறந்தகாலப்பொருள் படுவதில்லை யென்பது தெளிவு; பின்மாலை யெழுந்திருக்கவும், கோவிலை வலம்வரவும், குளம் செல்லவும், அங்கு நீராடவும், தாமரைப்பூப் பறிக்கவும் திரும்பிவரவும் எண்ணங்கொண்டு படுத்துக் கொண்டதாகவே சொல்லவேண்டியுள்ளது. இவ்விதமாகப் பொருள்கொள்ள வேண்டிய பிரமேயம் இத்திவ்விய நூலில் மிகவுண்டு. இதையும் இந்த முதல் சூர்ணையிலேயே காணலாம். இதில் விளக்கேற்றி, இருள் நீங்கி. விளக்கைக்கண்டு என்கிற இறந்தகால வினையெச்சங்கள் எதிர் காலப் பொருளிலேயே பிரயோகிக்கப் பட்டன. விவேகிக்கைக்கு என்று மேலுள்ள ஸ்ரீஸூக்திக்குச் சேருமிது. 'விளக் கேற்றுகைக்காகவும், அதனால் இருள் நீங்கப் பெறுதற்காகவும், பின் எம்பெரு

மானுகிற விளக்கைக் காண்கைக்காகவும் நல்லதும் தீயதும் விவேகிக்கைக்காகவும் கலைகளை யருள் செய்தானென்பதாக இந்த விவக்ஷிதமென்று உணரவேணும்.

மற்றொரு விஷயமும் குறிக்கொள்க. அதாவது, திவ்விய ப்ரபந்தப் பாசுரங்களுக்குப் பெரியவாச்சான்பிள்ளை முதலானோர் அருளிச்செய்த வியாக்யானங்களில் காணாத சில அர்த்த விசேஷங்களும் இவ்வாசிரியர் திருவுள்ளம் பற்றுவதுண்டு. நிர்வாஹ யோஜநா பேதங்கொள்கிற முறையிலே இது தீதற்றதே. இப்படி இவ்வாசிரியர் கொண்டதோர் அர்த்த விசேஷமும் இந்த முதல்சூர்ணையிலேயே காணக் கிடக்கின்றது. "மறைபாய் விரிந்த விளக்கை" என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் காணும்பொருள் இவர்கொண்டது எம்பெருமான்றன்னையே ஸாக்ஷாத்தாக மறைபாய் விரிந்த விளக்கென்று ஆழ்வார் கூறினதாகப் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானம் காட்டுகின்றது. இவ்வாசிரியரோ வென்னில் ஸகலவாக்குக்களுக்கும் வித்தான அகாரத்தை மறைபாய் விரிந்த விளக்கென்று சொன்னதாகக்கொண்டு அந்த அகாரத்திற்கு எம்பெருமான் பொருளாயிருப்பவனென்கிற காரணத்தினால் [அந்த ஸாமாநாதிகரண்ய நிர்தேசத்தினால்] ஆழ்வார் பாசுரத்தில் எம்பெருமான் பொருள்படுகிறானென்று திருவுள்ளம் பற்றி இச்சூர்ணையில் அகாரபரமாகவே அந்தப்பாசுரத்தை மேற்கொண்டருளினார். இப்படிப்பட்ட நிர்வாஹபேதம் இந்நூலில் ஐந்தாறிடங்களில் வருவதுண்டு. மேலே "பண்ணார் பாடல் பண்புரை யிசைகொள் வேதம்போலே" (50) என்ற சூர்ணையின் வியாக்கியானத்தில் மணவாளமுனிகளின் ஸ்ரீஸூக்தியுங்காண்க.

மற்றுமொரு பரம ஆச்சரியமான விஷயமும் இந்த திவ்யக்ரந்த அமைப்பில் பொலிந்துள்ளது; அதாவது, பலபல பாசுரங்களை இவ்வாசிரியர் மேற்கோளாக எடுத்தாளச்செய்தேயும் அவை இவருடைய ஸொந்தவாக்யம்போல் வரிசையாக அந்வயம் பெற்று விளங்கா நிற்கும். மற்றை நூல்களில் மேற்கோள்களைக் காட்டினால் "என்கிறபடியே" என்றும், "என்று" என்றும் இடையிடையே காணப்படும். அவை ப்ரமாண வசனங்களென்று தனிப்பட்டு நிற்குமேயொழிய நூலாசிரியருடைய வாக்ய சைலியாகவே பொருந்திப் பொருள் படமாட்டா. ஸ்ரீவசநபூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி, ரஹஸ்யத்ரயஸாரம் முதலிய ஸகல க்ரந்தங்களும் அவ்வகையிலேயே அமைந்தன. இந்நூலில் அப்படி மேற்கோளெடுத்துக் காட்டுவதாகத் தாமே கூறுகிற விடங்கள் மிகச்சில; "மறந்தேனுறியகிலாதே உணர்விலேனேனிலேனயர்த்தேன்றும்" "கடன்ஞாலம் மின்னிடை மல்லிகை...வாயுந்தீர்ப்பா ரென்னுமவற்றிலே தோன்றும்" என்பவை முதலிய சில சூர்ணைகளில் மாத்திரமே மேற்கோளான ப்ரமாணவசனங்கள் தமது வார்த்தையாக அமைந்துபொருள்படாமல் "என்று" "என்றவை" "என்கிற" இத்யாதி பதங்களைச் சேர்த்துத் தனியந்வயமாகக் காட்டப்பட்டிருக்கும். பெரும்பாலும் அப்படியல்லாமல் 'பிரமாணவசனங்களான மேற்கோளிவை' என்றே பிறரால் தெரிந்துகொள்ள முடியாமலும், அப்படி எடுத்தாளப்படுகிற அவையும் வரிசையாய் மிகப்பொருத்தமான அந்வயம் பெறும்படியாகவும் தொடுக்கப்பெறுவது இவ்வாசிரியரொருவர்க்கே சிறப்பாகவும் அற்புதமாகவும்

அமைந்த நடை. இந்நூலில் இந்த நடையொன்றே மாஞானிகளின் நெஞ்சை யுருக்கக் கூடியது. இவ்விஷயத்தையும் மேலே நாமெடுத்து விவரித்த முதல் சூர்ணியிலேயே காணலாம். "உணர்வென்னும் சுடர்விளக்கேற்றி" 'பிறங்கிருள் நீங்கி' 'போவிருந்த நந்தா வேதவிளக்கை' 'மறைபாய் விரிந்த துளக்கமில் விளக்கில்' என்னு மிந்த வாக்யங்களில் ஒவ்வொன்றிலும் பல மேற்கோள்கள் புகுந்திருக்கவும் "என்கிறபடியே" என்னவேண்டிய அவகாசமேயில்லாமல் இவருடைய ஸொந்த வாக்குப்போலே ஒன்றோடொன்று இணங்கி வரிசையாக ஒருநீராய்ப் பொருள் பட்டிருக்குமழகு ஒவ்வோரிடத்திலும் ஆழ்ந்து ஆராய்ந்து உணரவேண்டிய மஹத்தான அதிசயம். பலபல மேற்கோள்களையும் தமது வார்த்தையாகவே ஆக்கி அடைவே அந்வயம் பெறத் தொடுப்பதென்பது தனிப்பட்டதொரு சக்தி விசேஷ மன்றோ. இவ்விஷயத்தில் இன்னமுங்கேண்மின்.

இரண்டாம் ப்ரகரணத்தில் 'ச்ரமணீ விதுர ரிஷிபத்நிகளைப் பூதராக்கின புண்டரீகாக்ஷன் நெடுநோக்கு' என்பது ஒரு ஸ்ரீஸூக்தி. 'சபரியையும் விதுர ரையும் ரிஷிபத்நியையும் பரிசுத்தப்படுத்தின புண்டரீகாக்ஷனுடைய திவ்யகடாக்ஷ மானது' என்பது இந்த வாக்கியத்தின் பொருள். இந்த 'பூதராக்கின புண்டரீ காக்ஷன் நெடுநோக்கு' என்கிற சொல்தொடர் மிக அற்புதமானது. முன்னே யெடுத்த மூவரையும் எம்பெருமான் பரிசுத்தப்படுத்தி யருளினதை அந்தந்த ஸ்தலங்களிலுள்ள ப்ரமாணங்களைக் கொண்டே காட்டுவதாகவன்றோ இந்த சொல்தொடர் அவதரித்திருக்கின்றது. (1) *சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகு நந்தந!* என்கிற சபரியின் வார்த்தையை நினைப்பூட்டுகிறது 'பூதராக்கின' என்கிற சொல். (2) விதுரர்திருமாளிகையிலே அமுதுசெய் தருளின கண்ணபிரானை நோக்கித் துரியோதனன் 'பீஷ்மாசார்யரையும் த்ரோணா சார்யரையும் என்னையு முபேக்ஷித்து (விதுரனென்னும்) சூத்ரனுடைய அன்னத் தை எவ்வாறு புஜித்தாய்? என்று ஆக்ஷேபிக்கும்போது *பீஷ்ம த்ரோணாவதிக்ரம்ய மாஞ்சைவ மதுஸூதந, கிமர்த்தம் புண்டரீகாக்ஷ! புக்தம் வ்ருஷலபோஜநம்* என்ற ச்லோகத்தில் 'புண்டரீகாக்ஷ!' என்று ஸம்போதித்தான்; வையவந்த இந்த விடத்திலே இப்படிப்பட்ட ஸம்போதநம்தகவேதகாது. ஆனாலும் தைவிகமாகவே அவன் வாயில் புண்டரீகாக்ஷ! என்கிற ஸம்போதனம் வெளிவந்தது; விதுரன் சூத்ரயோநியில் பிறந்தவனாயினும் உன்னுடைய தாமரைபோன்ற திருக்கண்பட்ட தனால் சபரியைப்போலவே அவனும் பரிசுத்திபெற்றனன் என்பதாகக் காட்டுவதாம் இந்த புண்டரீகாக்ஷ! என்பது. ஆகவே இதுவும் திருக்கண்ணோக்கத்தாலே பரிசுத்தப் படுத்துகையென்கிற ப்ராக்ருத உத்தேச்ய விஷயத்தில் விதுரரைப் பரிசுத்தராக்கின தற்கு ப்ரமாண வசனம் காட்டினபடியாயிற்று. (3) இனி மூன்றாவதாகவுள்ள நெடுநோக்கு என்கிற சொல் *வேர்த்துப் பசித்து வயிறசைந்து வேண்டடிசிலுண் ணும் போது, ஈதென்று பார்த்திருந்த நெடுநோக்குக் கொள்ளும் பத்தவி லோசனத்து* என்கிற ஆண்டாள் பாசுரத்தை நினைப்பூட்டும் முகத்தாலே அந்த விஷயத்திற்கு ப்ரமாணம் காட்டினபடியாகிறது. ஆக இவ்வளவே ப்ராக்ருத விவக்ஷிதத் திற்கு ப்ரமாணம் காட்டுவதாகப் பிறர் தெரிந்துகொள்ள முடியாதபடிக்கு ப்ர

2

மாணங்களைக் காட்டும் முறையிலே உக்திவிந்யாஸம் செய்வது ஆசார்ய ஹ்ருதய காரர்க்கு அஸாதாரணமான ஸாமர்த்தியம். இப்படி அமைந்த க்ரந்தம் வேறு இடையாதென்பது புநருக்தம்.

இந் நூலில் 'இவற்றுக்கு மூலம் இருவல்லருள் நல்வினைகள்' என்பது எட்டாவது சூர்ணை. இதன் பொருளென்னவென்றால், கீழ்ச் சூர்ணையில் சொல்லப் பட்ட ஜன்மத்திற்கு மூலம் ப்ரபலங்களான புண்ய பாபங்கள்; (கீழ்ச் சூர்ணையில் சொல்லப் பட்ட) கடாக்ஷத்திற்கு மூலம் ஸ்வாபாவிகக்ருபையாகிற ஸௌஹ்ருதம். என்பது பொருள். இப்பொருளுக்கு வாசகமாக மூலத்திலுள்ள ஸ்ரீ ஸூக்தியோ வென்னில், 'இருவல்லருள் நல்வினைகள்' என்பது. *சார்ந்த இருவல்வினைகளும் சரித்து* என்கிற பாசுரத்தையும், *தொல்லருள் நல்வினையால்* என்கிற பாசுரத்தையுங்கொண்டு இந்த ஸ்ரீஸூக்தி வெகு அற்புதமாக அருளிச் செய்யப்பட்டது. ஆசார்யஹ்ருதயகாரருடைய ஸாமர்த்த்யங்களில் விலக்ஷண ஸாமர்த்தியமிது; விசேஷணம் பேதப்படாமல் விசேஷ்யங்கள் மட்டும் பேதப்பட்டிருக்கும் ப்ரமாணங்களைத் தாம் சேர்க்கும் போது, விசேஷண பதத்தை ஒரு தடவை மட்டும் சொல்லி விடுவர். (இதற்கு உதாஹரணம்.) *ஸர்வலோக சரண்யாய* என்கிற விபீஷண வசனத்தையும், *அபயம் ஸர்வ பூதேப்ய:* என்ற பெருமாள் வசனத்தையும் ஒரே வார்த்தையாக்கத் திருவுள்ளம்பற்றி "ஸர்வலோக பூதேப்ய:" என்றருளிச் செய்திருக்கிறார். மேலே காட்டின இரண்டு வசனங்களிலும் விசேஷ்ய பதங்கள் பேதப் பட்டிருந்தாலும் (ஸர்வ என்கிற) விசேஷணபதம் ஒன்றேயாதலால் அதை முன்னே ஒருமுறை ப்ரயோகித்து, வெவ்வேறான விசேஷ்யங்களை யொன்று சேர்த்து (ஸர்வ-லோகபூதேப்ய:) என்றவிது வேறொருவருடைய மதிக்கு நிலமன்று.

விசேஷணங்கள் வேறுபட்டு விசேஷ்யம் மட்டும் வேறுபடாமலிருக்கும் ப்ரமாண வசனங்களைத்தாம் சேர்க்கும்போது, வெவ்வேறான விசேஷணபதங்களை அப்படியே காட்டி, வேறுபடாத விசேஷ்யத்தை மட்டும் ஒரு முறை சொல்லுவர்; இதற்கு உதாஹரணம் மேலே காட்டின (இருவல்லருள் நல்வினைகள்) என்பது. *சார்ந்த இருவல்வினை* என்றவிடத்தும்*தொல்லருள் நல்வினை* என்ற விடத்தும் வினையென்பதே விசேஷ்யமாதலால் அதை இருமுறை பிரயோகித்திலர். ஒரு பாசுரத்தில் (இருவல்) என்பது விசேஷணம்; மற்றொரு பாசுரத்தில் (அருள்நல்) என்பது விசேஷணம். இந்த வெவ்வேறுபட்ட விசேஷணங்களை ஒன்று சேர்த்து (இருவல், அருள்நல்) என்றாக்கி விசேஷ்யமான வினையைக் கூட்டி 'இருவல்லருள் நல்வினைகள்' என்று யோஜித்திருப்பதான்று அஸாதாரண சக்தி விசேஷ நிபந்தநம்: இவ்விடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் விரிவாக விவரணம் காட்டியருளாமல் 'இருவல்லருள் நல்வினைகள் என்றது இருவல்வினையும் அருள்நல் வினையும் என்றபடி' என்று இவ்வளவே காட்டியருளினார். கெடுகாலத்து முன்னே தெலுங்குலிபியிலும் தமிழ்லிபியிலும் ஆசார்ய ஹ்ருதய வியாக்கியானத்தைப் பதிப்பித்தவர்கள் இந்த 'இருள்வல்வினையும் அருள் நல்வினையுமென்றபடி' என்று இல்லாததொரு ளகரத்தைச் சேர்த்துத் தவறாக அச்சிட்டு விட்டார்கள். அது நிற்க

இங்ஙனே எடுத்து நிரூபிக்கவேண்டிய அதிசயங்கள் இந்நூலில் அளவிற்றவை. ஒப்புயர்வற்ற சாதுரியமும் ஈடுமெடுப்புமில்லாத பாண்டித்யமும் மிக விளங்க அமைந்தது இவ்வுலகின்கண் இந்நூல் ஒன்றே யென்று எத்தனை தடவை கூறினாலும் மிகையாகாது.

இந்நூலைக் கண்டபாடமாக்கி அநுஸந்தானம் செய்துவருவார் பலருளர். அவர்கள், நெடுநாளைக்கு முன்பு அச்சிடப்பட்டிருக்கின்ற மூலப்பதிப்புகளிலும் வியாக்கியானப் பதிப்புகளிலும் காண்கிற பலவகைப் பிழைகளையும் விடாமல் தமது கண்டபாடத்திலே ஆதரித்து வருகிறார்களென்பதைப் பலவிடங்களிலே நாம் கண்டு வருந்துவதுண்டு. பெரும்பாலும் பிரசாரமுள்ள திவ்யப்ரபந்தப் பாசுரங்களிலுமே பலபல பிழைகள் புகுந்துள்ளனவென்றால், எளிதில் பொருளுணரமுடியாத இந்நூலில் பிழைகள் புகக் கேட்கவேணுமோ? அப்பிழைகளையெல்லாம் அகற்றி அடியேன் சுருக்கமான கருத்துரையுடனும், விரிவான கருத்துரையுடனும், பதவுரையுடனும் மூன்றுபதிப்புகள் செய்திருக்கின்றேனென்பதையும் இங்கு விண்ணப்பம் செய்துகொள்ளுகிறேன். தனிப்பட்ட மூலப் பதிப்புமுள்ளது.

நல்ல பாடங்களைக் காட்டினாலுங்கூட ரஸிக்கமாட்டாதவர்களும் அநாதி வாஸநா பலத்தாலே ஆக்ரஹப் படுகிறவர்களும் எக்காலத்திலும் எந்நாட்டிலுமுளர். இற்றைக்கும் பலரால் ஆதரிக்கப்படுகிற தவறான பாடங்களில் சிலவற்றை யெடுத்துக்காட்டி, அங்கு இருக்கவேண்டிய யுக்தமான பாடங்களையும் குறிப்பிடுகிறேன். ரஸிகர்கள் கண்டு ரஸிக்க வேணும். கூடிய மட்டில் திருத்தமான பாடங்களையே கொண்டிருக்கும் மஹான்களும் இவற்றைக் குறிக்கொள்க.

—பாடத்திருத்தங்கள்.—

1. முதல் சூர்ணையில் "உணர்வெனும் சுடர்விளக் கேற்றி" என்கிற பாடம் அச்சுப் பிரதிகளிலும் கண்டபாடங்களிலும் வந்திருக்கிறது. இந்த "உணர்வெனும்" என்பது பிசகு; 'உணர்வென்னும்' என்றிருக்க வேண்டுமென்பது கீழே விவரிக்கப்பட்டுள்ளது. (உணர்வெனும் என்று பாடங் கொண்டால் *ஓடினேனோடியுய்வதோர் பொருளாலுணர் வெனும் பெரும்பதம்* என்கிற வாக்கியத்தைக் கொண்ட* வாடினேன் வாடிப் பாசுரமே கொள்ளவேண்டியதாகும்; அது ப்ரக்ருதத்திற்கு அநபேக்ஷிதமாகையாலே அஸங்கதமாகும்; *உய்த்துணர் வென்னுமொளி கொள்விளக்கேற்றி* என்கிற பேயாழ்வார் பாசுரமே இவ்விடத்திற்குப் பொருந்துமாதலால் 'உணர்வென்னும்' என்பதே சுத்த பாடமாகும்.

2. ஆறாவது சூர்ணையில் "இவற்றுக்குக் காரணம் இரண்டிலொன்றில் ஒன்றுகைகள்" — என்பது தவறான பாடம். "முக்குணத்திரண்டவையகற்றி, ஒன்றினில் ஒன்றிநின்று" என்கிற திருவெழுகூற்றிருக்கைப் பாசுரம் இந்த விஷயவாக்யமாதலால் 'ஒன்றினில்' என்பதே சுத்தபாடம்.

3. பதினோராவது சூர்ணை "இவை கிட்டமும் வேட்டு வேளாணும் போலே" இத்யாதி. இதில் 'ஒண்பொருள் பொருளல்லாதவை யென்றே' என்றே நாம் ஐம்பது வருஷமாகச் சிந்தனை செய்திருப்பதும் நமது பலபதிப்புகளிலும் அச்சேற்றியிருப்பதுமான பாடம். ஸமீபகாலத்தில், ஒரு பெரியார் நெடுநாளைக்கு முன் திருத்தியிருந்த தெலுங்குலிபி ஸ்ரீகோசத்தைக் காண நேர்ந்தது. அதில் 'பொருளல்லாதவை' என்றவிடத்திலுள்ள வைகாரம் அடிக்கப்பட்டுள்ளது கண்டோம். "ஒண்பொருள் பொருளல்லாத வென்றே" என்பது தான் சுத்தபாடமெனத் தெரிந்தது. எண்பெருக்கந்நலத் தொண்பொருள்* என்கிறபாட்டிலிருந்து 'ஒண்பொருள்' என்பது கொள்ளப்பட்டது; *பொருளல்லாத வென்னைப் பொருளாக்கி* என்கிறபாட்டிலிருந்து 'பொருளல்லாத' என்பது கொள்ளப்பட்டது, ஆக "ஒண்பொருள் பொருளல்லாத வென்றே" என்பது பொருத்தம், ஒண்பொருளென்றே, பொருளல்லாத வென்றே என்று யோஜனை. உயர்ந்த பொருளென்று பாராமல், அபதார்த்தமென்று பாராமல் என்றதாயிற்று. ஆகவே இந்த வைகாரம் அநபேக்ஷிதமேயாகிறது. இனி, ஒண்பொருள் என்பதற்கும் பொருளல்லாத வென்பதற்கும் த்வந்த்வஸமாஸம் பண்ணினால் (ஒண்பொருள் பொருளல்லாதவை) என்னலாம். அதற்கு ஆவச்யகதையிருப்பதாகத் தெரியவில்லை. ஆனாலும் இது அஸங்கதமான பாடமன்று. வைகாரமில்லாத பாடம் மிகச்சிறக்கும்.

4. பதினைந்தாவது சூர்ணையில் 'ஆஸ்திக்யம் விவேகம்' என்று தனித்தனிப் பதமான பாடம் பிசகு; இது அந்வயியாது. "ஆஸ்திக்ய விவேகாந்யசேஷத்வ..." என்று ஸமஸ்தமான பாடமே சுத்தமானது.

5. இருபதாவது சூர்ணையில் "உணர்ந்துணர்ந்துணர்வும்...மிகவுணர்வு முண்டாம்" என்கிற பாடம் மிகவும் தவறு. சிறிதும் அந்வயியாது. உணர்வு உண்டாகுமென்று இங்குச் சொல்லுகிறதன்று. சூர்ணையின் தொடக்கத்தில் இவை என்றிருக்கிறது, அதுவே எழுவாய். கீழ்ச்சூர்ணையில் சொன்ன ப்ரவ்ருத்தியும் நிவ்ருத்தியும் உண்டாம் என்றபடி. அவை எதனாலேயுண்டாம் என்னில், அந்த ஹேதுக்களைச் சொல்லுகிறது இந்த சூர்ணை. "ஸ்வரூபத்தை உணர்ந்துணர்ந்துணரவும் உணர்வைப்பெறவூர மிகவுணரவு முண்டாம்" என்பது திருத்தமான பாடம். உணர—உணர்வதனாலே என்றபடி.

6. முப்பத்தைந்தாவது சூர்ணையில் 'குலந்தருமென்றும் மாசிற் குடிப்பழியென்றும்' என்கிற பாடம் மிகத்தவறு; "குலந்தருமென்கிற பாட்டிற் கூறிய படியே கிடைக்கிற மாசில்குடிக்குப் பழியாகுமென்கிற காரணத்தினால்' என்று இங்கு விவக்ஷிதமான பொருளாதலால் "குலந்தரு மென்னும் மாசிற் குடிப்பழியென்று" என்பது திருத்தமான பாடம். "குலந்தரு மாசிற்குடிப்பழியென்று" என்றுமொரு பாடமுண்டு; அதில் விசேஷ பாதகமில்லை.

7. ஸூ. 36ல் "கோத்ரஸூத்ர சரணகூடஸ்தர்" என்பது "கோத்ர சரணஸூத்ர கூடஸ்தர்" என்றிருக்கத்தக்கது. இந்த க்ரமத்திலேயே மணவாள மாமுனிகளின் வியாக்கியானம் அவதரித்திருப்பதனால்.

8. ஸூ. 37ல் "அறியக்கற்று வல்லாரானல்" என்பது பிழை; "வல்லாரானல்" என்றிருக்க வேணும். ஆழ்வார் ஸ்ரீஸூக்தி அங்ஙனே யிருக்கையாலே. *அறியக்கற்று வல்லார் வைட்டணவர் ஆழ்கடல் ஞாலத்துள்ளே* என்கிற திருவாய்மொழிப் பாசுரமே இங்கு விஷயவாக்கியம்.

9. ஸூ. 49ல் "சொல்பயிற்றிய வேதம்" என்பது தவறு. "சொல் பயிற்ற, வேதம்" என்பது திருத்தமான பாடம். சொல்பயிற்ற—கற்பித்ததனாலே என்றபடி.

10. ஸூ. 54ல் "ஸ்வரூப ரூபகுணவிபூதி..." என்பது தவறான பாடம்; இங்கே 'ரூப' என்பது சேராது 'ஸ்வரூப குணவிபூதி' என்றிருக்கவேணும். ரூபமென்பது மேலே தனிப்படவருகிறது.

11. ஸூ. 57ல் "கருவுள் வேறிலாமை" என்பது தவறு; வேறலாமை என்பது திருத்த மான பாடம். "வெள்ள நீர்ச் சடையானும் நின்னிடை வேறலாமை விளங்க நின்றதும்" என்பது மூல ஸ்ரீஸூக்தியாதலால். இல்லாமையும் அல்லாமையும் ஒன்றன்று.

12. ஸூ. 60ல் "காயோடென்னுமவையே" என்பதில் "என்னுமிவையே" என்று திருத்தவேணும்; "வீழ்கனியு மூழிலையு மென்னுமிவையே நுகர்ந்து" என்கிற பெரிய திருமடற்சந்தை இங்கு விஷயவாக்ய மாதலால்.

13. ஸூ. 62ல் "விசும்புத்துழாய் திருமாலென்றும் எங்கே காண்கே னென்றும் இவாலமாப்பு" என்கிற பாடம் மிகத்தவறு; அஸங்கதம். "திருமாலென் றெங்கே காண்கே னென்னு மிவர்" என்பது திருத்தமான பாடம். (திருமாலென்று) என்றவிடத்திலுள்ள (என்று) என்கிற சொல்லானது ஆசார்ய ஹ்ருதயகாரருடையதன்று; நம்மாழ்வாருடைய பாசுரத்திலேயே அது சேர்ந்துள்ளது; *சிந்தைகலங்கித் திருமாலென்று அழைப்பன்* என்பதன்றோ பாசுரம் அக. திருமாலென்று என்னுமிவர், எங்கே காண்கே னென்னு மிவர்—என்று விவக்ஷிதமாகையாலே (திருமாலென்றெங்கே காண்கே னென்னுமிவர்) என்கிற பாடமே அந்வயிக்கும். மேலே அசுத்த பாடமாகக் காட்டப் பட்டுள்ள பாடம் அந்வயிக்கவே மாட்டாது.

14 ஸூ. 63ல். "வேதாதிகளில் பௌருஷமான கீதாவைஷ்ணவங்கள் போலே" என்றவிடத்தில் "பௌருஷ மானவ கீதா......" என்பது திருத்தமான பாடம். *வைதிகம் பௌருஷம் ஸூக்தம் தர்ம சாஸ்த்ரேஷு மானவம்* என்கிற ப்ரமாண[illegible] இங்கு விஷயம்.

15. 'ம்லேச்சனும் பக்தனானால்' இத்யாதி 85 ஆம் சூர்ணையில் "முடி மன்னனும்" என்பது 'முடிமன்னவனும்' என்று திருத்தத் தக்கது. "தாளந்த நீண் முடியரசர்தங் குரிசில் தொண்டை மன்னவன்" என்கிற பெரிய திருமொழிப் பாசுரம் இங்கு விஷய வாக்யம். மன்னன் என்கிற சொல்லுக்கும் மன்னவனென்று பொருளுண்டே யென்று நினைக்கலாகாது. மூலப்ரமாணவசனத்திலுள்ள சொல்லை யன்றோ ஆசிரியர் கையாண்டது.

16. சூ. 94-ல். "கழறலர்ஞான முருவின" என்பது சிறிதும் அர்த்த மில்லாத பாடம். திருவிருத்தத்தில் *கழறலமொன்றே நிலமுழுதாயிற்று* என்ற பாட்டில் 'கழறலம்' என்றும் 'அழறலர்' என்றும் வருவதால் அந்த வாஸனை கொண்டு இங்கு "கழலறலர் ஞான முருவின" என்று பாடம் பண்ணிவிடுகிறார்கள். "கழலலர் ஞான முருவின" என்பது சுத்தமான பாடம். (உலகளந்த) கழலென்ன அலர்ஞானமென்ன [அதாவது தனது விகஸிதஜ்ஞானமென்ன] இவ்விரண்டும் மறுப்பாடுருவின பரப்பெங்கும் என்றபடி.

17. சூ. 102. "இடகிலேன் நோன்பறிகிலேன்" என்பது அந்வயிக்க முடியாத அபத்த பாடம். "......நோன்பறிவிலேன்" என்பது திருத்தமான பாடம். "நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்" என்கிற விஷய வாக்யத் தோடும் பொருந்தும். நோன்பிலேன் அறிவிலேனென்று சொல்ல வேண்டிய ஸ்தானத்தில் (நோன்பறிவிலேன்) என்று யோஜித்தது இந்நூலின் அஸாதாரண நடையில் சேர்ந்தது.

18. சூ. 112. *"இவன் நடுவே அடியானித்யாதி-சூர்ணையில் "இவன் நடுவே அடியானென்ன,...வன்களவி லநுபவமாக" என்று திருத்திக் கொள்க. இங்கு இன்னமும் பழைய ஏட்டுப் பிரதிகளை ஆராய்ந்து பார்க்கவே இசை.

19. சூ. 119. "தேறுங்கலங்கி யென்றும்" என்றிருப்பதில் என்றுமென்பது அசங்கிதம். "தேறுங்கலங்கியென்று தேறியும் தேறாதும் ஸ்வரூபம் குலையாது" என்பதே பொருத்தம். தேறும் கலங்கி யென்று—*தேறுங்கைகூப்பும்* என்கிற பாசுரத்திலும் *கண்ணீர் மிகக் கலங்கிக் கைதொழும்* என்கிற பாசுரத்திலும் தெளிந்த தசையோடு கலங்கின தசையோடு வாசியற எப்போதும் அஞ்ஜலி மாறாதென்கையாலே, தேறியும் தேறாதும் — *தேறியும் தேறாதும் மாயோன் திறத்தனளேயித்திருவே* என்கிறபடியே தெளிவு கலக்கமாகிற உபயா வஸ்தையிலும், ஸ்வரூபம் குலையாது— சேஷத்வரூபமான ஸ்வரூபம் நிலை குலையாது. என்பது இந்த சூர்ணையின் பொருள். இதில் "தேறுங்கலங்கி" என்பது மட்டுமே ப்ரமாணோபாதானம். தேறியும் தேறாது மென்பது திருவாய் மொழிப் பாசுரமேயானாலும் அது ஆசிரியருடைய வார்த்தைப்பாடாகவே உபயோகிக்கப் பட்டுள்ளது. ஆகவே (என்றும்) என்றிருந்தால் அந்வயியாது. இவ்விஷயம் நுண் மதியோர்க்கே நிலமாகும்.

20. "வித்யை தாயாகப் பெற்று" இத்யாதியான 121-ஆம் சூர்ணையில் நோக்கி யலங்கரித்து" என்கிற பாடம் சிறிதும் பொருள் படமாட்டாதது. "நோக்கியர் அலங்கரித்து" என்றே பாடம். "மானேய்நோக்கியரான திவ்யாப்ஸரஸஸுக்கள் எதிரே வந்து... அலங்கரித்து" என்கிற வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்க. *மழலை தீரவல்லார் காமர் மானேய்நோக்கியர்க்கே* என்கிற பாசுரமன்றோ இங்கு விஷயம்.

21. அழுக்கொழு மித்யாதி 127ஆம் சூர்ணையில், "ஊனுக வீரசரிதம் கற்பார்" என்கிற ஸ்தானத்தில் 'வீரசரித மூணைக் கற்பார்' என்கிற பாடம் ஏட்டுப்பிரதிகளில் காண்கிறது. வியாக்கியானத்திற்கு மிதுவே இணங்கும்.

21.B. "பெருக்காறு பலதலைத்து" இத்யாதி 131-ஆம் சூர்ணையில் "உடையப் பெருகுகாதல்" என்பதே நமக்குப் பாடம். இங்கு ஒரு பெரியார் ஸாதித்ததாவது, இவ்விடத்து மணவாள மாமுனிகள் வியாக்கியானத்தில் *பெருகு மால்வேட்கை* *கழியமிக்கதோர் காதல்* என்கிறபடியே—என்று இரண்டு சந்தைகள் உதாஹரிக்கப்பட்டிருக்கையாலே இரண்டாவது சந்தைக்கு மூலத்தில் விஷயமில்லையாகிறது; "உடையப் பெருகு மிகு காதல்" என்பதே சுத்தமான பாடம்—என்று.

22. 'என்பெறுதியென்ன ப்ரமிபாது' இத்யாதியான 152-ஆம் சூர்ணையில் "கடந்து புகுந்து தகைவறப்புக்கு" என்பது தவறு. 'கடந்து புகும் தகைவறப் புக்கு" என்பதே திருத்தமான பாடம். கடந்துபுகும் தகைவு அற—கடந்து புக வேண்டுகையாகிற தகைவு இல்லாதபடி என்க.

23. சூ. 156. 'நம் பிழையும்' என்பது பிசகு; 'தம் பிழையும்' என்பதே சுத்தபாடம். திருவாய்மொழியில் *என்பிழைகோப் பிணைத்தருளி* என்றபாசுரத்தை யுட்கொண்டு ஆசிரியர் தாம் கூறுவதாதலால் தம்பிழையுமென்பதே பொருந்தும். நம்பிழையுமென்றால் அந்வயியாது.

24. சூ. 160. 'மண்ணோர் விண்ணோர் வெறப்பில்'—இங்கு வெறப்பில் என்பது வைப்பில் என்று திருத்தத்தக்கது. 'வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு' என்கிற பாசுரம் இங்கு விஷய வாக்யம். 'தன்னோர் வேங்கட விண்ணோர் வெற்பனே' என்கிற பாசுரத்திற்குச் சேர 'வெற்பில்' என்கிற பாடமும் இருக்கலாமென்று சிலர் கூறுவது இவ்விடத்து ப்ரமேயமின்னதென்று அறியாமையினாலாகும். இதைப்பற்றின விரிவு மேலே காண்க.

25. சூ. 183. 'ஸௌகுமார்யப்ரகாசம் அச்சேரியிலே' என்பது தவறு; ஆய்ச்சேரியிலே யென்பது சுத்தபாடம். 'உடையநங்கையார் பிறந்தகமாகையாலே

ஆழ்வார்க்கு அய்ச்சேரியா யிருப்பதாய்'' என்கிற மணவாளமாமுனிகளின் வியாக்கியானஸ்ரீஸூக்தியோடுஞ் சேரும். இதைப்பற்றியும் மேலே விரிவு காண்க

26. சூ. 183. "முகநாபி பாதங்கள் த்வாரத்ரயத்தாலே''—முகநாபி பாதங்களை என்பது சுத்த பாடம்.

27. சூ. 198. "வைத்தெழவூதி"—ஊது என்று திருத்துக.

28. சூ. 202. "போகேலென்றாலும் உகப்பையும் தவிர்ந்து''—'போகேலென்றால் உகப்பையுந் தவிர்ந்து' என்பது சுத்த பாடம். 'உம்மை' இங்குவேண்டா.

29. சூ. 209. "அடைக்கலம் சூடி பொய்யாதாலும்'' 'சூடிய' என்று திருத்துக. *திருமால் திருப்பேர்வல்லாரடிக்கண்ணி சூடிய என்கிற திருவிருத்தப் பாசுரம் காண்க.

30. சூ. 211. "எம்மாவொழி நெடுவே யென்கிற''—'எம்மாவொழிவில் நெடு... என்று திருத்துக.

31. சூ. 118. "காலாஸக்தி பலகதிக்கு''—'காலாஸத்தி ..' என்று திருத்துக. ஆஸக்தியன்று; ஆஸத்தி.

32. சூ. 219. "வளவேழ்வைப்பாமவன் அவையுள்" —இங்கு 'அவன்' என்பது அநந்விதம். 'வளவேழ்வைப்பாமவையுள்' என்பதே சுத்தம்.

33. சூ. 220. "எம்மா வீட்டை உபாயாநுகுணமாக்கினவர்'' —உபயாநுகுண....' என்று திருத்துக. (இதிலேயே) "திண்ணனவெ தென்று"—'திண்ணனவெதென்று'' சுத்தபாடம்.

34. சூ. 222. "ஆடுங்கள்ளிறைச்சி" —'ஆடுகள்ளிறைச்சி' என்று திருத்துக. திருவாய் மொழியில் *அங்கோராடுங்கள் நெம்பராய்* என்றிருந்தாலும், உம்மைகளை நீக்கியே ஆசிரியர் பாசுரம் கிரட்டியுள்ளா ரென்பது ஸுஸ்பஷ்டம்.

35. சூ. 223. "தேவர் குழாங்களைக் கண்டு கூப்பிட்டு" — காப்பிட்டென்று திருத்துக. *பொலிக பொலிக பொலிகவில் நோக்கு.

36. சூ. 124. "திரிவிக்கிரமனுக் குறள் கோலப்பிரானைப்"—'திரிவிக்கிரமனுக் குறள்...' என்பது சுத்த பாடம்.

37. சூ. 226. 'அவர்க்கே குடிகளாய் பாதந்த்ரஸ்வரூபத்தை'—'குடிகளாம்' என்று திருத்துக.

38. சூ. 227. "வைகல்வாழ்முதலானவிதோபாயம்"—"வாழ்தலான" என்று திருத்துக. *குற்றமில் சீர்கற்று வைகல் வாழ்தல்* என்கிற பாசுரமன்றோ இங்கு விஷயம்.

39. சூ. 228. அறியச் சொன்ன ஸுப்ரபாதத்தை "—'ஸுப்ரபாதத்தே' என்று திருத்துக. (அகிலேபே) "மாயையை முடிவிக்க"—'முடிக்க' என்று திருத்துக. (அகிலேயே) "ஸாக்ஷாத்கரிக்க பரமப்ராப்திக்கு" — பரப்ராப்திக்கென்று திருத்துக. "ப்ரஹ்மவிதாப்நோதி பரம்" என்ற உபநிஷத்துக்குச்சேர. (அகிலேபே) "கூசம் செய்யாது செய்திப்பிழை"—'செய்யாத' என்று திருத்துக.

தெலுங்கிலும் தமிழிலுமுள்ள பழைய அச்சுப் பிரதிகளை வைத்துக்கொண்டு திருத்தம் காட்டுவதானால் இன்னமும் அதிகமாகவே காட்ட நேரும். அடியேன் வெளியிட்டுள்ள பதிப்புகளில் அக்ஷரந்தோறும் உற்று நோக்கினால் அந்த அபத்த பாடங்களெல்லாம் அறும். அடியேனுக்குங் கிடைக்காத சுத்த பாடங்கள் இன்னமும் இருக்கக்கூடும். அவற்றைப் பரமக்ருபையோடு தெரிவிப்பார் திறத்தில் பெருநன்றிபாராட்டி வெளியிடுவேன். இப்போது காட்டின திருத்தங்களில் ஒன்றுகூட அடியேன் ஸ்வதந்திரமாகச் செய்ததன்று. ஏடுகளில் கண்டனவும் பெரியார்வாய்க் கேட்டனவுமாம். இந்தத் திருத்தங்கள் வேண்டாதவையென்று தோன்றிப் பழைய பதிப்புக்களிற் பாடங்களையே ஆதரிக்கவேணுமென்பார்க்கு அடியேன் மறுமாற்றமொன்று முரைக்ககில்லேன். "எங்ஙனே சொல்லினு மின்பம் பயக்குமே" என்ற ரீதியில் இந்த திவ்யக்ரந்தத்தை எவ்வண்ணமாகப் பாடங்கொண்டு அநுஸந்தித்தாலும் பரமபோக்யமே யாகும். ... ... ...

## வைப்பில் பாட ஆராய்ச்சி.

கீழேகாட்டிய திருத்தங்களில் (24) *மண்ணோர் விண்ணோர் வெற்பில்* என்பது தவறானபாடமென்றும் (வெற்பில்) என்பதை நீக்கி வைப்பில் என்றே ஓதவேணுமென்றும் காட்டப்பட்டிருக்கின்ற திருத்தத்தில் சிலர் த்ருப்தி பெறாமலிருந்ததனால் விவேகிகள் பரம திருப்தியடையும்படி இங்கு அவ்விஷயத்தை மிகவும் விசதமாக விவரிக்கின்றேன். அங்கு (வெற்பில்) என்றிருந்தால் அது சிறிதும் பொருந்தாது; ஆசிரியரின் திருவுள்ளத்திற்கு அடியோடு இசையாதது; மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸரணிக்கும் சிறிதும் ஏலாதது என்பதை நிரூபிக்கின்றேன். திருவாய்மொழியில் *தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பனே* என்று பாசுரமிருப்பதால் அதற்குச் சேர இங்கு (வெற்பில்) என்றுதானே யிருக்கவேணுமென்று சிலர் நினைப்பர். இந்த சூர்ணையானது திருவேங்கட வெற்பைப்பற்றியே அவதரித்

துள்ளதனால் (வெற்பில்) என்றல்லது வேறுவிதமாக இருக்கவேதகாதென்றும் சிலர் நினைப்பர். இந்நினைவெல்லாம் மிகத்தவறான நினைவு என்பதை உபபாதிக்கின்றோம்.

இத்திவ்யக்ரந்தமானது அருளிச்செயற் பாசுரமயமானதென்றும், ஒரு வார்த்தையில் பலமேற்கோள்களைத் தொடுப்பது இவ்வாசிரியருடைய அஸாதாரண மான நடையென்றும் கீழே பரக்க நிரூபித்திருக்கின்றோம். "மண்ணோர் விண்ணோர் வைப்பில்" என்றவிதில் இரண்டுபாசுரங்கள் தொடையுண்டன; *கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு* என்கிற நம்மாழ்வார் பாசுரத்தையும் *தண்ணாருவி வேங்கடமே வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு* என்கிற திருமழிசைப்பிரான் பாசுரத்தையும் மணவாள மாமுனிகள் தமது வியாக்கியானத்தில் உதாஹரித்தருளி யுள்ளார். மூலத்தில் (வெற்பில்) என்று பாடமிருந்திருக்குமானால் *வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு* என்கிற திருமழிசைப்பிரான் பாசுரத்தை மாமுனிகள் உதாஹரித்தருள ப்ரஸக்தியே யில்லை.

இதற்குமேல் ஒன்று சொல்லக்கூடும்; மூலத்தில் 'மண்ணோர் விண்ணோர்' என்றிருப்பதனால் அந்த வாக்யம் *கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்திலிருப்பதுபோல *வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு* என்கிற மழிசையர்கோன் பாசுரத்திலு மொருவாறு இருப்பதால் இதைக் காட்டுவதற்கே மாமுனிகள் இந்தப் பாசுரத்தையும் உதாஹரித்தருளினர்; வைப்பு என்பதைக் கடாக்ஷித்து உதாஹரித்ததல்ல—என்று.

இது ஒவ்வாது; மாமுனிகள் இந்தப்பாசுரத்தை உதாஹரித்தவளவோடு நிற்கவில்லை; 'உபய விபூதிக்கும் நிதியான திருமலையிலே' என்று மூலத்தின் மீது அர்த்தமும் விளங்க அருளிச்செய்துள்ளார். (வெற்பில்) என்கிற பாடமிருந்த தாகில் அதற்குரிய சந்தையை மாமுனிகள் காட்டியிருக்கவேண்டுமே. அதைத் தொடவேயில்லையன்றோ. *தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பனே* என்ற சந்தையை எடுத்துக்காட்டியிருந்தாலன்றோ (வெற்பில்) என்கிற பாடம் புகுவதற்கு இடமுண்டாம். மாமுனிகள் அந்தச் சந்தையைச் சிந்தையிலுங்கொள்ளவில்லையே. மூலத்தில் எந்தச்சொல் உளதோ அந்தச் சொல்லைக் கொண்ட பாசுரத்தை மாமுனிகள் இங்குக் காட்டாதிருக்க ஔசித்யம் கிடையாது. இங்கு *கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு* என்று மாமுனிகள் உதாஹரித்திருப்பதானது மூலத்திலுள்ள *மண்ணோர் விண்ணோர்* என்கிற வளவுக்கேயாகும். (வெற்பில்) என்று மூலத்தில் பாடமிருந்து அதை நோக்கியிருந்தாராகில் *வேங்கட விண்ணோர் வெற்பனே* என்னுமதையும் உதாஹரித்தேயிருப்பர். அஃதில்லாமையால் இந்த வெற்பில் பாடம் அஸம்பாவிதமென்று நிச்சயிக்கத்தக்கது.

இதற்குமேல் ஒன்று சொல்லலாம்; (வெற்பில்) என்பது இங்கு அந்வயிக்க மாட்டாததன்றே; பாசுரத்திலுமுள்ள சொல்தானே அது. திருமலைக்கும் வாசக

மான சொல்தானே. இது இருந்தால் என்ன ஹாநி? இதைத்தள்ளி (வைப்பில்) என்கிற பாடத்தை ஸ்தாபிப்பதில் என்ன சுவை? என்று. இது யுக்தமான கேள்வியே; இங்கு (வைப்பில்) என்பது இருந்தே தீரவேண்டுமென்பதை மாமுனிகள் தாமே இன்சுவைமிக நிரூபித்தருளியிருப்பதால் அதையெடுத்து விளக்குவதே நமக்குற்ற பணியாகும். கேண்மின்;

இந்த சூர்ணையில் (வைப்பு) என்பதே உயிரான வாசகம். இதை ஊன்றி நெஞ்சிற் பதியவைத்துக் கொள்வதே இங்கு முக்கியமானது. திருவாய்மொழி யாயிரத்தில் ஆழ்வார் மங்களாசாஸனஞ் செய்தருளின திருப்பதிகள் இருபத்தெட்டு; அவற்றில் விளங்கும் திருக்குணங்களைத் தனித்தனியே இருபத்தெட்டு சூர்ணைகளில் அருளிச் செய்கிறார் மூலகாரர். முதல்நான்கு திருப்பதிகளில், பர வ்யூஹ விபவ அந்தர்யாமி குணங்கள் விளங்குவதாகவும் மூலகாரர் திருவுள்ளம் பற்றினதாக மாமுனிகள் வ்வரித்தருளியுள்ளார். அந்த நான்கு திருப்பதிகளாவன—

(1) கோயில். 2. திருமலை. 3. திருக்குருகூர். 4. திருக்குறுங்குடி.

(1) கோயிலில் வ்யூஹகுணம். (2) திருமலையில் அந்தர்யாமிகுணம். (3) திருக்குருகூரில் பரவாஸுதேவகுணம். (4) திருக்குறுங்குடியில் விபவகுணம். இந்த முறையில் திருக்குணங்கள் விளங்குவதாக வகுத்துள்ளார். இது மூலத்திலேயே ஸ்பஷ்டமாகவுள்ளது. இந்த நான்கு சூர்ணைகளிலும் திருப்பதியைக் குறிப்பிடும்போதே "இது வ்யூஹஸ்தாநீயம், இது அந்தர்யாமிஸ்தாநீயம், இது பரவாஸுதேவஸ்தாநீயம், இது விபவஸ்தாநீயம்" என்பது மிகநன்றாக விளங்கும்படி சொல்தொடை அமைந்துளது.

(1) கோயில் வ்யூஹஸ்தாநீயமாகக் கொள்ளப்பட்டது. வ்யூஹம் பள்ளிகொண்ட இடமாதலால் *வன்பெருவானக மித்யாதி [ஸ்ரீரங்கபரமான] சூர்ணையில் இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவாளன் திருப்பதி" என்றே வாசகமிடப்பட்டது. இதில் "திருக்கண்கள் வளர்கின்ற" என்பது உயிரான சொல்; இத்தலத்தில் [கோயிலில்] வ்யூஹ குணமான ஸௌஹார்தம் முக்கியமாக விளங்குகின்றது. (2) இரண்டாவது—திருமலை; இது நிற்க; இதில்தானே இப்போது விவாதம். இதைப்பற்றிப் பிறகு எடுத்துக் கொள்வோம். (3) திருக்குருகூர் பரத்வஸ்தாநீயமாகக் கொள்ளப்பட்டது. பரமபதமானது *ஆதிப்பிரானவன் [illegible]புறை கோயிலாதலால் அச்சொல்தொடையாலேயே இத்தலத்தைக் குறிப்பிட்டு இங்கே பரத்வகுணமான ப்ரேசத்வம் பொலியுமென்றார். (4) திருக்குறுங்குடி இத்தலம் விபவஸ்தாநீயமாகக்கொள்ளப்பட்டது. அது விளங்கும்படியாகவே [illegible] வாமநத்தில்" என்று இச்சொல்லையிட்டே தலத்தைக் குறிப்பிட்டார். [வாமனன் விபவாவதாரமன்றோ.] இத்தலத்தில் விபவகுணமான லாவண்யம் பூர்ணமென்றார்.

இனி ப்ரக்ருதவிஷயம். (2) திருமலை. இத்தலம் அந்தர்யாமிஸ்தாநீயமாகக் கொள்ளப்பட்டிருக்கிறது. கண்ணுக்குப் புலப்படாதபடி மறைந்திருப்பது அந்தர்யாமித்வம். இதை நிதி யென்கிற சொல்லாலே முன்னோர்கள் வழங்கியுள்ளார்கள். கண்ணுக்குத் தோன்றாது மறைந்து கிடந்து ஸமயத்தில் உதவுகிற வைத்தமாநிதி போன்றவன் அந்தர்யாமி. *அந்தர்ஹிதோ நிதிரஸித்வம் அசேஷபும்ஸாம்* என்றார் ஆழ்வானும் ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில். *வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு* என்று இத்திருவேங்கடம் நிதியாகக் கூறப்பட்ட படியால் இத்தலத்தை அந்தர்யாமிஸ்தாநீயமாகக் கொள்வதற்கு மிகவும் பொருத்தமுளதென்று திருவுள்ளம்பற்றினர் ஆசிரியர். இத்தலத்தைக் குறிப்பிடவேண்டும்போது "மண்ணோர் விண்ணோர் வைப்பில்" என்றே குறிப்பிடவேண்டிய அவசியம் இப்போது நன்கு புலப்பட்டதாகும். தோஷஜுஷ்டமான இடங்களிலெங்கும் உள்ளுறைந்து கிடப்பதானது தோஷபோக்யத்வ கார்யமாதலால் இத்தலத்தில் *நிகரில் புகழாகிய வாத்ஸல்யம் ஜ்வலிக்குமென்றார். வாத்ஸல்யம் ஜ்வலிக்குமிடம் அந்தர்யாமித்வமாகவே யிருக்க வேண்டுமாதலால் அதை நன்கு தெரிவிக்குமதான வைப்பு என்கிற சொல் இங்கு இருந்து தீரவேண்டியதாயிற்று. இவ்விஷயங்களெல்லாம் மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தைச் சிறிது ஊன்றி நோக்கினாலே நன்கு புலப்படும்.

இதற்குமேல் ஒருவர் சொன்னார்; நம்மாழ்வாருடைய திவ்யதேசாநுபவ ப்ரகாரங்களைச் சொல்லவந்த இவ்விடத்தில் வேறொரு ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியையும் கூட்டிக்கொண்டு மூலமியற்றுவது யுக்தமன்றே. வெற்பில் என்று பாடங்கொண்டால் நம்மாழ்வார் ஸ்ரீஸூக்தியொன்றே கொள்ளப்பட்டதாகிறது; வைப்பில் என்று பாடங் கொண்டால் திருமழிசையாழ்வாருடைய ஸ்ரீஸூக்தியும் கூட்டிக் கொள்ளப்பட்டதாகிறது. இது அநாவச்யகந்தானே—என்று. இந்தவாதம் இந்த திவ்யக்ரந்தத்தில் வாஸனை பண்ணியறியாதார் செய்யுமதுவேயாகும். முதன் முதலாகத் திருவரங்கம் பெரிய கோயிலைக் குறிக்குமிடத்து "வன்பெருவானக முதலுய்ய இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவாளன் திருப்பதி" என்றார்; இந்த வாக்யம் பெரியாழ்வார் குலசேகராழ்வார் ஆகிய இவ்விருவருடைய சந்தைகளையே யிட்டுத் தொடுக்கப்பட்டிராநின்றதே யன்றி இதில் நம்மாழ்வாருடைய பாசுரம் ஒரு துணுக்கைகூட சேரவில்லை. *வான்திகழுஞ்சோலை மதிளரங்கர்வண் புகழ்மேலான்ற தமிழ் மறைகளாயிரமும்* என்னப்பட்ட ஆயிரத்தில் கோயில் விஷயமான சந்தை இல்லையா? எதுக்குத் திருவாய்மொழியை அடியோடு விட்டிட்டு வேறு சில ஆழ்வார்களின் பாசுரங்களையிட்டு அருளிச்செய்யவேணும்? என்று விமர்சிக்கவேணும்.

உண்மையில் இங்கு நம்மாழ்வார் பாசுரத்தை ஏன் கொள்ளவில்லை யென்னில்; கேண்மின். தென்திருவரங்கத்தைப் பற்றி நம்மாழ்வார் திருவாக்கில் அவதரித்த பாசுரங்களில் *பொருநீர்த்திருவரங்கா* செங்கயல் பாய் நீர்த்திருவரங்கத்தாய் * எறிநீர்த்திருவரங்கத்தாய்* *திட்கொடிமதிள் சூழ் திருவரங்கத்தாய் * செழுநீர்த் திருவரங்கத்தாய் * * திருவரங்கத்துள்ளாய் * தண்புனல் சூழ் திருவரங்கத்தாய் *செழுந்தடம்புனல் சூழ்திருவரங்கத்தாய் * தென்திருவரங்கம் கோயில் கொண்டானே * என்றிப்படிப்பட்ட உக்திகளேயுள்ளன. திருவரங்கத்தில் திருக்கண்வளர்பவனென்கிற சொல்லமைப்பு ஒரு பாசுரத்திற்கூட இல்லை. [திருவரங்கம் வ்யூஹ ஸௌஹார்தப்ரதாநம்] என்று கொண்ட ஆசிரியர்க்கு வ்யூஹம்போலே கோயிலைப் பள்ளிகொண்ட விடமாகவே குறிப்பிட வேண்டியது அவசியமாயிற்று. அதற்கிணங்கின சொல் நம்மாழ்வார் ஸ்ரீஸூக்திகளிலின்றிக்கே வேறு ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளிலிருந்தபடியால் அவற்றைக் கொண்டருளினர்—என்பதே வஸ்து ஸ்திதி. இது போலவே திருமலையை நிதியாகக் குறிப்பிடவேண்டிய அவசியம் இருந்ததனால் அப்படி நிதியாகக்கூறின திருமழிசையாழ்வாருடைய சந்தை கொள்ளப்பட்டது என்றுணர்க.

நம்மாழ்வாருடைய பாசுரங்களில் திருவரங்கத்தை சயனஸ்தலமாகக் கூறின விடம் கிடையாதென்று சொல்லலாமோ? கங்குலும் பகலுமென்ற பதிகத்தில் பைகொள் பாம்பணையாய்! என்கிற விளி இல்லையோ? என்று சிலர் கேட்கக்கூடும். கேண்மின்; *மையல் செய்தென்னை மனங்கவர்ந்தானே யென்னும் * என்கிற அப்பாசுரத்தில் இரண்டாமடியில் * தண்புனல் சூழ் திருவரங்கத்துள்ளாய் * என்கிற விளி ஸ்ரீரங்கநாதனைப் பற்றி அஸாதாரணமாகவுள்ளது; இனி அதிலேயே ஈற்றடியில் *பைகொள்பாம்பணையாய் * என்றுமிருப்பதானது அந்யதாஸித்தமாகவுங் கூடுமாதலால் ஸ்ரீரங்கநாதனுக்கே அஸாதாரணமான விளி யென்று அதனைக் கொள்வதற்கில்லை, ஆனது பற்றியே ஆசிரியர் அந்தச் சந்தையைக் கொள்ளாமல் ஸுஸ்பஷ்டமான சந்தைகளை வேறு ஆழ்வார்களின் ஸ்ரீ ஸூக்திகளிலிருந்து கொண்டருளினர்.

## ஆய்ச்சேரி விஷயம்.

மலைநாட்டிலுள்ள திருவண்பரிசாரத்தில் விளங்கும் திருக்குணத்தை விவரிக்குஞ்சூர்ணையில் "ஸௌகுமார்யப்ரகாசம் ஆய்ச்சேரியிலே" என்றிருந்தபாடம் அச்சேரியிலேயென்று பிறழ்ந்துவிட்டதென்று கீழே திருத்தங் காட்டினோம். இதுவும் சிலர்க்கு ஆக்ஷேபமாம். அச்சேரியிலே என்றபாடம் தவறானது; அர்த்தமற்றதானபாடம். மாமுனிகளின் வியாக்கியானத்தில் "ஆழ்வாருடைய திருத்தாயாரான உடையநங்கையார்க்குப் பிறந்தகமாகையாலே ஆய்ச்சேரியான திருவண்பரிசாரத்திலே" என்றுள்ளது. மூலத்திற்போலவே வியாக்கியானத்திலும் அச்சேரியான என்று அச்சுப்பிழையுள்ளது. இது எப்படி அந்வயிக்குமென்று புத்திமான்கள் விமர்சிக்கவேண்டுமே. தொலைவில்லிமங்கல மென்கிற திருப்பதியில் விளங்குங்குணத்தையருளிச் செய்யும் சூர்ணையில் [*கடிதகடகவிகடநேத்யாதியில்] "அவ்வூரிலே த்விகுணம்" என்கிறார். இது அழகியதே. தொலைவில்லிமங்கலப் பாசுரத்தில் * அவ்வூர்த் திருநாமங்கேட்பது சிந்தையே* என்றிருப்பதால் அந்தரஸத்தைக் காட்டியருள

அவ்வூரிலே என்றது மிகவழகியது. அப்படி அச்சேரியிலே யென்பதற்கு ஒரு பொருத்தமுமில்லை யென்பது ஆராய்ச்சி வல்லுநர்க்கே அறிய வெளிது. திருவாய்மொழியில் * வாயுந்திரையுகளும் * என்கிற பாட்டின் இரண்டாமடியிலே "ஆயும் அமருலகும்" என்றிருக்கின்ற தன்றோ; அங்கு "ஆய்" என்பதற்குத் தாய் என்று பொருள்; அந்தச் சொல்லே இங்குக் கொள்ளப்பட்டது. * உண்ணுஞ்சோறு பருகுநீர் * என்கிற பதிகத்திலே * அயற்சேரியுள்ளாரு மெல்லே * என்று தாய்ப்பேச்சாக வெளிவந்திருக்கின்றது. அதைக் கடாக்ஷித்தே ஆசிரியர் அதற்குப் பிரதிகோடியாக ஆய்ச்சேரி யென்று அருளிச் செய்தார் என்பது நுட்பமான ஆராய்ச்சியினால் அறியத்தக்கது. ... ... ... ...

## இனி வியாக்கியானத்திலிறங்குவோம்.

இத்திவ்விய க்ரந்தத்திற்கு மணவாள மாமுனிகள் இட்டருளின வியாக்கியானம் அமுதினுமாற்ற வினிது. அதனுடைய பரம போக்யதையை ஸர்வஜ்ஞர்களன்றோ கொண்டாடவேண்டும். உலகில் வியாக்கியானங்களருளிச் செய்த ஆசிரியர்கள் பலருளரெனினும் அவர்களுடைய வியாக்கியானங்களிலே பலவகையான க்லேசங்களை யநுபவியா நின்றோம். பல குறைகளையுங் காணுகின்றோம். அப்படி ஒருவிதமான குறையும் கூறுதற்கிடமின்றியே ஒருவகையான க்லேசத்தையுங் கொடாதே ஸ்வச்ச கங்காப்ரவாஹமென்ன வமைந்த வியாக்கியானம் மணவாள மாமுனிகளுடையதேயாம். ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் மிகத் தெளிவாகத் திருவுள்ளத்திலடக்கிக் கொண்டிருந்து, தேனும் பாலுங் கன்னலுமமுதுமான ஸ்ரீஸூக்திகளைத் தொடுத்திடுந்திறன் மாமுனிகளொருவர்க்கே அஸாதாரணமாகும்.

ஸம்ஸ்க்ருதத்தில் வியாக்கியான நூல்களெழுதினவர்களுக்குள் மல்லிநாதர்க்கு மிக ப்ரஸித்தி; தமிழில் உரை நூல்களெழுதினவர்களுக்குள் நச்சினார்க்கினியர், பரிமேலழகர் முதலிய சிலர்க்கு மிக்க பெரும்புகழ். ஆக இந்த வ்யாக்யாதாக்களெல்லாரும் மணவாள மாமுனிகள் பக்கலிலே நெடுநாள் குருகுலவாஸம் செய்ய வேணுமென்றால் இது ஈஷத்தும் அதிவாதமாகாது. வேண்டாதவற்றை அறவே விட்டும், வேண்டியவற்றைச் சிறிதும் விடாமலும், அவசியமற்ற அதிகப்படி விஷயங்களை இழுத்துப் புகவிட்டுக் கொள்ளாமலும், சொற்களிலும் பொருள்களிலும் மாதுர்யத்திற்கு ஓரிடத்திலும் குறைபாடின்றியும், பூருவர்களின் ஸரணியில் ரேகாமாத்ரமும் வழுவுதலின்றியும், அபூர்வமான ஆராய்ச்சி வல்லமை பொலியவும் வியாக்கியான மருளிச் செய்ய வல்லவர் கடல் சூழ்ந்த மண்ணுலகில் மணவாள மாமுனிகளொருவரே. ஒருவரே!! ஒருவரே!! இவருடைய மதுர கம்பீர திவ்ய ஸூக்திகளின் சுவைகளைப் பருக பாக்ய மற்றவர்கள் "மணவாள மாமுனிக்கு என்ன தெரியும்? ஏதோ தமிழ் தெரியும் போலிருக்கிறது" என்று அவலீலையாகச் சொல்லியும் ஆக்ஷேபித்தும் நசித்துப் போவாருமுளர். அப்படிப்பட்ட கருவிலே திருவிலாதாரை எண்ணாத போதெல்லாமினியவாறே. ஸகல சாஸ்த்ரஸாகர பாரங்கதர் ஸ்வாமியொருவரே யென்று குன்றிலிட்ட விளக்காகக் காட்டும்படியன்றோ ஸ்வாமியின் வியாக்கியான திவ்ய ஸூக்திகள் அவதரித்திருக்கின்றன. மற்ற ஆசாரியர்களை பஹுஜ்ஞர்களென்ன வேணும். ஸ்வாமியை ஸர்வஜ்ஞரென்ன வேணும். ... ... ... ...

## ப்ராஸங்கிகமானவொரு பெரிய விஷயம்.

இரண்டாவது ப்ரகரணத்தில் "அழுந்தொழும் ஸ்நேஹபாஷ்பாஞ்ஜலியோடே" இத்யாதி சூர்ணையில் நம்மாழ்வார்க்கு, இளையபெருமாள் பரதாழ்வான் சத்ருக்நாழ்வான் ப்ரஹ்லாதாழ்வான் முதலான பல புராண புருஷர்களோடு ஸாம்யம் சொல்லுகையில் சத்ருக்நாழ்வானோடு ஸாம்யம் நிர்வஹிக்கிற விடத்தில் (மூலத்தில்) "புலன்கோள் நித்யசத்ருவிசிந்தநம்" என்கிற ஸ்ரீ ஸூக்தியுள்ளது. பாகவத சேஷத்வமே பரமபுருஷார்த்த மென்று அறுதியிட்ட சத்ருக்நாழ்வான் பெருமாளுடைய வடிவழகில் ஈடுபடாதே பரமபாகவதோத்தமனான பரதாழ்வானுடைய அநுவ்ருத்தியிலேயே ஊன்றியிருக்கச் செய்தேயும், அந்த பரதாழ்வானுடைய உகப்புக்காகப் பெருமாளுடைய வடிவிலேயும் நெஞ்சு சென்று பெருமாளையே சிந்தனை செய்து கொண்டிருந்ததுபோல நம்மாழ்வாரும் இங்ஙனே யிருந்தாரென்று நிரூபணம் செய்கிறது இங்கு. சத்ருக்நாழ்வான் படியை ஸ்ரீ ராமாயண ச்லோகங்கள் கொண்டும், ஆழ்வார் படியைத் திருவாய்மொழிப் பாசுரங்கள் கொண்டும் நிரூபித்தருளுகிறார். சத்ருக்நாழ்வான் பெருமாள் வடிவிலே நெஞ்சு சென்று அதனையே நெஞ்சில் சிந்தனை செய்து கொண்டிருந்தானென்பதற்கு ஸ்ரீ ராமாயணத்திலிருந்து ப்ரமாணம் காட்டியாகவேண்டும். மூலத்தில் ஸ்ரீ ராமாயண ப்ரமாண மொன்று காட்டப்பட்டிருக்கிறது. ஆசார்ய ஹ்ருதய க்ரந்தமானது தமிழ்ப் பிரமாணங்களையோ, ஸம்ஸ்க்ருதப் பிரமாணங்களையோ எவ்விதமாகக் காட்டுகிற வழக்கமோ அவ்விதமாகவே இங்கும் காட்டியிருக்கிறது. அதாவது 'நித்யசத்ரு விசிந்தநம்' என்று மூலமுள்ளது. அயோத்யாகாண்டத்தில் எண்பத்தொன்பதாவது ஸர்க்கத்தில் (3) "ஜாகர்மி நாஹம் ஸ்வபிமி தமேவார்யம் விசிந்தயந்" என்கிற ச்லோகம் சத்ருக்நாழ்வானுடைய வார்த்தையாக ஸ்பஷ்டமாய்க் காணப்பட்டுவருகிறது. இந்த ச்லோகமேதான் ப்ரக்ருத ஸ்தலத்திற்கு மூலகாரரால் மூலமாகக் கொள்ளப்பட்டிருக்கிறது. (விசிந்தயந்) என்பதை (விசிந்தநம்) என்று மாற்றி ஸாதித்திருப்பதானது வாக்யாந்வயத்திற்காக. இந்த க்ரந்தத்தின் சைலியே இப்படிப்பட்டதாகையால் இதில் விவாதம் வேண்டா. ஏவஞ்ச "தமேவார்யம் விசிந்தயந்" என்கிற சத்ருக்நவசநத்தையே கொண்டு மூலம் அமைக்கப்பட்ட தென்பது நிர்விவாதம். இவ்விடத்தில் மணவாள மாமுனிகளின் வியாக்கியானம் இருக்கும் படியை இனி விமர்சிப்போம்.

"சத்ருக்நாழ்வான்........பெருமாள் வடிவிலே நெஞ்சு சென்று *விசிந்தயந்* என்கிறபடியே எப்போதும் அத்தை மநஸ்ஸிலே கொண்டிருக்குமா போலே" என்று அருளிச் செய்து விட்டு,

"விசிந்தக மென்கிறவிதுக்கு இப்படி வ்யாக்யானம் பண்ணிற்று இதின் பட்டோலை யானதிலே உறுமோவென்று நித்யசத்ருவை வென்று புலன் கொள் வடிவை விசிந்தயனாயிருக்கும் என்று விசிந்தயன் என்று ஒரு வசன முண்டாகவு மெடுத்து இப்படி இவர்தாமே அருளிச்செய்து வைக் கையாலே. இவ்விடத்திலும் சிந்தகமென்னுமல் விசிந்தகமென்றது அவ் வசந ஸூசகமாகவிறே. 'விசிந்தயந்' என்கிற வசநம் இன்ன விடத் திலே யென்று த்ருஷ்டமாய்த்தில்லை; வந்தவிடத்திலே கண்டு கொள்வது"

என்றருளிச்செய்து தலைக்கட்டியிருக்கிறார். இத்தால் 'விசிந்தயந்' என்கிற வசன மிருக்குமிடம் மாமுனிகளுக்குத் தெரியவில்லை யென்று ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப் பட்டதாகிறது. அயோத்யாகாண்டத்தில் (89—3) * தமேவார்யம்' விசித்தயந் * என்றிருப்பது அல்பஜ்ஞர்களான அஸ்மதாதிகளுக்கும் நன்றாகத் தெரிந்திருக்க இது ஸர்வஜ்ஞரான மாமுனிகளுக்குத் தெரியவில்லை யென்றால் இதனில் மிக்க வியப் புண்டோ? இங்கே தத்துவமென்ன என்று விவேகிகள் யாவரும் விமர்சிக்க ப்ராப்தம். ஆங்காங்கு காலக்ஷேபம் ஸாதிக்கும் ஸ்வாமிகளிலே சிலர் இங்கே சொல்லுவதென்ன வென்றால்; மணவாளமாமுனிகள் ஸர்வஜ்ஞராயிருக்கச் செய்தேயும், ராமக்ருஷ்ணாதி கள் அஜ்ஞத்வ அசக்தத்வங்களை பாவித்ததுபோலத் தாமும் பாவிக்கவேண்டி, தமக்குத் தெரியாத விஷயங்களும் உண்டென்று காட்டவேண்டி இங்ஙனே அருளிச் செய்து வைத்தார் என்கிறார்கள். வேறுசிலர் சொல்லுவதாவது—"இன்னவிடத் திலே யென்று த்ருஷ்டமாய்த்தில்லை" இத்யாதி பங்க்திகள் மாமுனிகள் அருளிச் செய்தவையாக இருக்கமாட்டா; பிற்காலத்தில் ப்ரக்ஷிப்தங்களாக இருக்கும்—என் பது. இப்படிப்பட்ட ஸமாதானங்கள் அத்யந்தம் அஸமஞ்ஜஸங்கள். முந்தின ஸமாதானத்தில், விசிந்தயந் என்கிற ப்ரமாண மிருக்குமிடம் மாமுனிகளுக்கு நன்றாகத் தெரிந்திருந்தும் வேணுமென்றே தெரிந்ததில்லை யென்று எழுதினா ரென்பது மாமுனிகளை விப்ரலம்பக கோடியிலே யாக்குவதாகும். இது ஸ்வாமியின் இயல்புக்குச் சிறிதும் சேர்ந்ததன்று. பிந்தின ஸமாதானம் (ஸ்ரீஸூக்திகள் ப்ரக்ஷிப் தம் என்பது) ஸுதராம் அநுபபந்நம். ஏனென்னில், உண்மையில் ப்ரமாண வசனத்தைப் பூர்த்தியாக எடுத்துக்காட்ட வேண்டியிருந்தும் காட்டியருள்வில்லை; பட்டோலையிலிருந்து ஸ்ரீஸூக்தியை யுதாஹரித்திருப்பது பிறர்க்கு ஸாத்யமான காரிய மன்று. ஆகவே ப்ரக்ஷேபவாதமும் சிறிதும் அங்கீகரிக்கத் தக்கதன்று.

பின்னை இங்கு உண்மை யென்னவெனில்; ஊக்கத்தோடு கேண்மின். ஸ்ரீராமாயணாதி இதிஹாஸ புராண ச்லோகங்களில் பலவகையான பாட பேதங்கள் பூர்வாசார்யர்களின் காலத்திலேயே சேர்ந்திருக்கின்றன. இதற்குப் பல நிதர்சநங் கள் காட்டவேண்டியதுண்டு; அது மற்றொருகாலாகும். இவ்விடத்தில் "தமே

வார்யம் விசிந்தயந் " என்று பாடமிருப்பது போலவே " ராமமேவாநுசிந்தயந் " என்கிற பாடமும் முன்னோர்களின் காலத்திலேயே யிருந்திருக்கிறது. கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியான அவதாரிகையின் அரும்பதவுரையிலே "ராமமேவாநு சிந்தயந்" என்கிற பாடமே யிருப்பதை எல்லாப் பதிப்புகளிலும் காண்கிறோம். ஸ்ரீ ராமாயண ஸ்ரீகோசங்களிலும் சிலவற்றில் இங்ஙனே பாடம் காண்கிறோம். ஆசார்ய ஹ்ருதயகாரருக்கு " தமேவார்யம் விசிந்தயந் " என்கிற பாடமே கிடைத் திருக்கிறது. மணவாளமாமுனிகளுக்கு " ராமமேவாநு சிந்தயந் " என்கிற பாடமே கிடைத்திருக்கிறது. மூலத்தில் விசிந்தநம் என்றும், பட்டோலையிலும் 'விசிந்தயந்' என்றும் ஸுஸ்பஷ்டமாக இருக்கையாலே இவ்விடத்திற்கு (அநுசிந்தயந்) என்றுள்ள வசனத்தை யெடுத்துக்காட்ட ஔசித்யமில்லையாயிற்று. அந்த வசனம் இங்கு ஸ்புரிப்பதற்கே இடமில்லாமல் போயிற்று. ஆசார்ய ஹ்ருதய க்ரந்தம் அப்போது ப்ரவசந பரம்பரையிலும் விசேஷமாக வந்திருக்கவில்லை போலும். ஆக, " ராமமேவாநு சிந்தயந் " என்கிற பாடமே கொண்டிருந்தவர் மாமுனிகள்; "தமேவார்யம் விசிந்தயந்" என்கிற பாடமே கொண்டிருந்தவர் ஆசார்ய ஹ்ருதயகாரர். இதனால் இவ்விடத்தில் இப்படிப்பட்ட க்லேசமுண்டாயிற்றென்று உண்மையுணர்ந்த பெரியார்கள் உபபாதிக்கிறார்கள்.

இந்த ஆசார்ய ஹ்ருதய மஹாக்ரந்தம் முதன்முதலாகத் தெலுங்கு லிபியில் 1876-ம் ௵த்தில் அச்சிடப்பட்டது. [இற்றைக்கு எண்பத்திரண்டு வருஷங்களுக்கு முன்பு அச்சிடப்பட்டதென்கை.] அந்தப்பதிப்பில் மூலத்திலும் வியாக்கியானத்திலும் காணப்படுகிற பிழைகள் அபரிமிதம். அக்ஷரங்கள் மாறுடினவை பதங்கள் மாறுடினவை வாக்யங்கள் விட்டுப்போனவை.......... இப்படிப்பட்ட அவத்யங்கள் அனேகம் புகுந்தன. ஸ்தாலீபுலாக ந்யாயேந ஸ்வல்பம் காட்டுவோம்; பதினோராவது சூர்ணையின் வியாக்கியானத்தில் "ஒண்பொருள் பொருளல்லாதவை யென்னுதே" என்கிற மூலத்திற்குச் சேர "ஆத்மாவின் சீர்மை பாராதே" என்றும் "அசித்தின் சிறுமை பாராதே" என்றும் மணவாளமாமுனிகள் ஸாதித்திருக்க, இரண்டிடத்திலும் (சீர்மை பாராதே என்கிற பதிப்புள்ளது. ஆத்மாவுக்குச் சீர்மையுண்டு; அசித்துக்குச் சிறுமைபோயொழிய சீர்மை கிடையாது. இது தவறே.

மூன்றும் ப்ரகரணத்தில் நாரை கொக்கு குருகுகளுக்கு ஸ்வாபதேச மருளிச்செய்கிற "ஆசறுதூவி யென்னும்" என்கிற சூர்ணையின் வியாக்யானத்தில் "தாய் வாயில் உண்ணும் பிள்ளைக்கு இரை தேடி" என்கிற மூல ஸூக்திக்குப் பொருள் விவரிக்குமிடத்தில் "தங்கள் வாக்கால் உபகரிக்கும் பகவத்விஷயத்தை உபஜீவித் திருக்கும் குழைச்சரக்கான சிஷ்யர்களுக்குபாயாநுகுண்மாக ஸாத்ய்யமான பகவத் விஷயார்த்தங்களை சாஸ்த்ரங்களிலே ஆராய்ந்து உபகரித்து" என்று அச்சிட்டிருக்கி

ருர்கள். இதில் "சிஷ்யர்களுக்குபாயாநுகுணமாக" என்கிற பங்க்திக்கு என்ன பொருளென்று விமர்சிக்கவேணும். 'உபாயாநுகுணமாக' என்றது இவ்விடத்திற்கு ஒருவிதத்திலும் சேராது. சிலர் "வயோநுகுணமாக" என்றிருக்குமென்று ஊஹிக்கிருர்கள். நம்முடைய புத்தியைக்கொண்டு நாம் ஸ்வதந்திரமாகத் திருத்துவதிற் காட்டிலும் ஓலை ஸ்ரீ கோசத்தைக்கொண்டு திருத்தலாமென்று பார்த்தபோது ஸுப்ரஸித்தராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமி ஓலை ஸ்ரீகோசத்தில் தாம் ஸேவித்த பாடத்தைப் பரமக்ருபையுடன் அநுக்ரஹிக்க ப்ராப்தமாயிற்று. "யகாரஸ்தாநே ககார: பாட்ய:" என்று அந்த ஸ்வாமி ஸாதித்தருளினபடி. அதாவது. "சிஷ்யர்களுக்குபாயாநுகுணமாக" என்பதல்ல; "சிஷ்யர்களுக்கு பாகாநுகுணமாக" (பாகாநுகுண) என்பது திருத்தமான பாடமென்கை. இப்போது எவ்வளவு அழகாக அர்த்தமாகிறதென்று பார்க்க. சிஷ்யர்களின் ஜ்ஞான பாகத்திற்குத் தகுந்தபடி ஆசார்யர்கள் ஆராய்ந்து உபதேசிப்பர்களென்று சொல்வது மிகவும் பொருத்தமானதன்றோ. ககாரத்தை யகாரமாக மாற்றிவிட்டதனாலுண்டான க்லேசம் எவ்வளவென்று பார்க்க.

மூன்றும் ப்ரகரணத்திலேயே "தமருகந்த அடியோமுக்கே யென்னும் பின்னுனர் வணங்குமிடத்திலே எல்லாம் பூர்ணம்" என்ற விடத்து வியாக்கியானத்தில் "அவதாரங்களுக்குப் பிற்பாடரானவர்களுக்கு அநுபாவ்யமான அர்ச்சாவதாரத்திலே 'ஸர்வம் ஸஹே' என்கையாலே பரத்வாதிகளில் அநுபாவ்யமான குணங்களெல்லாம் பூர்ணமென்கை" என்கிற பங்க்திகள் தெலுங்கு பதிப்பிலும் தமிழ்ப் பதிப்பிலும் ஏகரீதியாக அச்சிடப்பெற்றுள்ளன. இங்குக் காட்டிய 'ஸர்வம் ஸஹே' என்கிற ப்ரமாணம் எந்த அம்சத்திற்கு ஸம்வாதமாக அருளிச்செய்ததென்று விமர்சிக்கவேணும். "அர்ச்யஸ் ஸர்வஸஹிஷ்ணு:" இத்யாதிகளிற் சொல்லப்பட்ட (அர்ச்சாவதார அஸாதாரணமான) ஸர்வஸஹிஷ்ணுத்வத்தை குணபூர்த்திக்கு நிபந்தமாகக் காட்டுவதற்கு 'ஸர்வம் ஸஹே' என்கிற ப்ரமாணம் மேற்கோளாக இங்குக் காட்டப்பட்டதென்று சிறிதும் கூசாமலே சில காலக்ஷேப ஸ்வாமிகள் ஸாதித்து வருகிருர்கள். "அபூத பூர்வம் மம பாவி கிம் வா ஸர்வம் ஸஹே மே" என்கிற ஸ்தோத்ரரத்ந ஸ்ரீஸூக்தியிலுள்ளதான (ஸர்வம் ஸஹே) என்கிற விது ப்ரக்ருத ஸ்தலத்திற்கு அணுமாத்ரமாவது பொருந்துமாவென்று வினவினுல் பொருந்தமாட்டாததை மணவாளமாமுனிகள் அருளிச்செய்வரோ? அவரருளிச்செய்திருக்கும்போது, பொருந்துமாவென்கிற விசாரம் செய்ய நாமார்? என்றுசீறுகிருர்கள். அஸ்மதீய ஸம்ப்ரதாயக்ரந்த தூஷணதீக்ஷிதர்களாகவுள்ள பிறர்களோவென்னில் உண்மையுணராது தூஷிக்கத் தலைப்படுகிருர்கள். இங்கு உண்மையான பாடம் என்னவென்ருல், ஸ்ரீவசனபூஷண வ்யாக்யாநாதிகளிலும் உதாஹ்ருதமான "வைவசும் வாணசும் ஸஹோ

ஸர்வம் பூர்ணம் ஸஹோம்'' என்கிற உபநிஷத் வாக்யமே இங்கு (ஸர்வம்ஸஹோ) என்று விகாரமடைந்திட்டது. இவ்விகாரம் அச்சுப்பிரதிகளில் மாத்திரமன்று; நாலைந்து எட்டுப்பிரதிகளிலும் நமக்குப் புலப்பட்டது.

இந்த ஆசார்யஹ்ருதயவியாக்கியானத்தைத் தமிழ்லிபியில் 1806-ம் வருஷத்தில் ஸ்ரீமான் உ. வே. திருநீர்மலைமாடபூஷி ஸ்ரீநிவாஸராகவாசாரியர் ஸ்வாமியென்பவர் வெளியிட்டார். அஸ்மதாசார்யரான ஸ்ரீமத் பரமஹம்ஸ. அழகியமணவாள ராமாநுஜஜீயர்ஸ்வாமி 1905ம் வருஷத்தில் ஸ்ரீ பார்த்தஸாரதி யுத்ஸவம் ஸேவிக்கத் திருவல்லிக்கேணியி லெழுந்தருளியிருந்தபோது மேலேசொன்ன திருநீர்மலை ஸ்வாமியானவர் ஸ்ரீ ஜீயர்ஸ்வாமியிடம் வந்து, தாம் ஆசார்ய ஹ்ருதய வியாக்கியானத்தைத் தமிழ் லிபியில் அச்சிட்டுக்கொண்டிருப்பதாகத் தெரிவித்து அந்த ஸமயத்தில் அச்சாகியிருந்த சில பாரங்களைக் காண்பித்தாராம். ஜீயர்ஸ்வாமி அவற்றைக் கடாக்ஷித்தருளி "தேவரீர் லோகோபகார புத்தியினால் அபரிமிதமான பொருளைச் செலவுசெய்து நடத்துகிற இந்தப் பதிப்பில் பலவிதமான பிழைகள் காண்கிறதே; ஸம்பிரதாயத்திலும் தமிழிலக்கண நூல்களிலும் பரிசயமுள்ள மஹான்களைத் துணைகொண்டு இது செய்தால் நன்றாயிருக்கும்; (இவைத்துக்கு. அவைத்துக்கு) என்று இப்படியெல்லாம் அஸம்பத்தமாக அச்சிட்டிருக்கிறீரே; தமிழில் (இவைத்துக்கு, அவைத்துக்கு) என்கிற சொற்கள் கிடையாதே." என்று சில விஷயங்கள் ஹிதமாக ஸாதித்தாராம். அது கேட்ட அந்த திருநீர்மலை ஸ்வாமிக்கு அபரிமிதமான சீற்றம உண்டாயிற்றாம்; எனக்கு ஸம்ப்ரதாயம் தெரியாதென்றும் தமிழ் தெரியாதென்றும் இந்த ஜீயர் ப்ரசாரம் செய்யப்பார்க்கிறார் என்று கடுஞ்சொற்களைப் பொழிந்துகொண்டே எழுந்து சென்றாராம். பிழைகளை ஸ்பஷ்டமாக எடுத்துக் காட்டினாலுங்கூட இங்ஙனே சீறிச்சிவந்து நிந்திப்பவர்களே உலகில் மலிந்திருக்கிறார்கள்.

அந்த ஸமயத்தில் அந்த திருநீர்மலை ஸ்வாமி தாம் பதிப்பித்துக்கொண்டிருந்த ஆசார்யஹ்ருதய வியாக்கியானத்தில் இரண்டாம் ப்ரகரணம் முடிவுபாகம் நடந்துகொண்டிருந்ததாம். * பந்து கழல் பாவை * இத்யாதியான கடைசி சூர்ணையின் வியாக்கியானம் முடியுமிடத்தில் "துதையாவது சிறு சோறடுகைக்கு உபகரணமாகையாலே" என்கிற ஸ்ரீஸூக்திக்குமேல் (முந்தின தெலுங்கு பதிப்பில்) ஐந்தாறு பங்க்திகள் அடியோடு விட்டுப்போயின. திருநீர்மலைஸ்வாமியின் தமிழ்ப் பதிப்பிலும் அப்படியே விட்டிருந்தனவாம். அவற்றை ஸ்ரீ ஜீயர்ஸ்வாமி எழுதிக்கொடுத்தருளி "இந்த பங்க்திகள் அவச்யம் இருக்கவேண்டியவை; இதையாவது சேர்த்தால் நன்றாயிருக்கும்" என்று சொல்லியனுப்ப, "நான் வைத்துக்கொண்டிருக்கிற ஓலைஏட்டிலும் இந்த பங்க்திகள் இல்லை; எந்த ஆதாரத்தைக்கொண்டு இதை நான் சேர்ப்பது?" என்று ப்ரபலமாக ஆக்ஷேபிக்க, பிறகு மஹத ப்ரயாஸேந சேர்க்கும்படி

செய்தருளினதாக ஜீயர்ஸ்வாமி ஸாதிக்கக் கேட்டிருக்கை. இங்கே, முந்தின தெலுங்குபதிப்பில் விட்டுப்போய் பிந்தின தமிழ்ப்பதிப்பில் சேர்க்கப்பட்ட பங்க்திகளாவன;—(தூதையாவது சிறு சோறடுகைக்கு உபகரணமாகையாலே) என்பதற்கு மேல்—

"இந்த்ரிய வ்யதிரிக்தங்களான போகோபகரணங்களுக்கு உபலக்ஷணம்; போகஸ்தானமான தேஹத்தையும் போகோபகரணமான இந்த்ரியங்களையும் பந்துகழலித்யாதியாலே லீலோபகரணமாகச் சொல்லுகிறது. லீலையாவது தாதாத்விகரஸமான வ்யாபாரமாகையாலே"

என்றிவ்வளவுபங்க்திகள். இந்த பங்க்திகள் இல்லாவிட்டால் அவ்விடத்து ஸங்கதியை நிர்வஹிக்கவேமுடியாதென்பது ப்ராஜ்ஞர்களுக்குத் தெரியும். பழைய தெலுங்கு பதிப்பை வைத்துக்கொண்டு ப்ரவசனம் செய்தருளும் மஹான்கள் இங்கு விட்டுப்போனபங்க்திகளால் ஒருகுறையையுமுணராமல், அந்வயிக்கவில்லையேயென்ற க்லேசமும் படாமல் அநாயாஸமாகக் காலக்ஷேபம் நிர்வஹித்து வருகிறார்கள். ஹயக்ரீவீயம் பஞ்சலக்ஷணீ, சதுர்தசலக்ஷணீ முதலான க்ரந்தங்களின் அச்சுப் பதிப்புகளில் பல விபர்யாஸங்களுண்டு; க்ரந்த மியற்றினவர் (........அவச்சிந்ந) என்று சில விடங்களிலும் (.......அநவச்சிந்ந) என்று சிலவிடங்களிலும் எழுதியிருப்பதுண்டு. அச்சில் அவை மாறிவிழுந்திருக்குமிடங்கள் சிலவுண்டு. (அவச்சிந்ந) என்றிருக்க வேண்டு மிடத்தில் (அநவச்சிந்ந) என்றும், (அநவச்சிந்ந) என்றிருக்கவேண்டுமிடத்தில் (அவச்சிந்ந) என்றும் விழுந்திருக்கிறது. சாஸ்திரவ்யுத்பத்தியும் ஆழ்ந்த அறிவும் பெற்று ப்ரவசனம் செய்பவர்கள் ருஜுவாக அந்வயிக்கவில்லையே யென்று க்லேசப் பட்டு, ஆலோசித்து, இங்கு அச்சுப்பிழையுள்ளதென்று தெளிந்து திருத்தி ப்ரவசனம் செய்து போருவர்கள். "சதுச்சாஸ்த்ரங்களில் எந்த க்ரந்தத்தையும் நாம் அவலீலையாக ப்ரவசநம் செய்யவல்லோம்" என்றிருக்கும் சில மஹாமதிகள் மேலே காட்டின அவச்சிந்ந—அநவச்சிந்ந—விபர்யாஸங்களில் சிறிதும் கிலேசப்படாமலும் மயங்காமலும் அங்குலீந்ருத்தஸாரர்களாய் வெகு அட்டஹாஸத்தோடும் ப்ரவசனம் செய்தே போவர்கள்; இங்குப் பிழையுள்ளதென்று கண்டறியவேமாட்டார்கள். ப்ராஜ்ஞர்கள் எடுத்துரைத்தாலும் இது விச்வாமித்ரஸ்ருஷ்டியென்று ஏசி நிற்பர்கள். இவ்விதமாகவே ஸம்ப்ரதாயக்ரந்தங்களிலும் நேர்ந்திருக்கிற விபர்யாஸங்களை ப்ராமாணிகர்கள் எடுத்துக்காட்டினால் சில அதிகாரிகள் வீணான ஆக்ஷேபங்களைச்செய்து போதுபோக்குவது தவிர, சுவைகண்டு மகிழ பாக்யமற்றவர்களாகிறார்கள்.

இந்த மஹாக்ரந்தத்தில் நான்காம் ப்ரகரணத்தில் "மூன்று தத்துக்குப் பிழைத்த அருவினை நோய்" என்றவிடத்து வியாக்கியானத்தில் பழைய தெலுங்கு தமிழ்ப்பதிப்புகளிரண்டிலும் விட்டுப்போன பங்க்திகள் ஏட்டுப்பிரதிகளிலிருந்து

எம்மால் பதிப்பிக்கப்பட்டுள்ளன. அந்த பங்க்திகள் மிகவும் அவசியமானவை. அவை ப்ரகாசிதமா யிருப்பதற்கு க்ருதஜ்ஞதாநுஸந்தானம் பண்ண ப்ராப்தமாயிருக்க, அது செய்யாததோடு ஆக்ஷேபிக்கவும் முன்வந்திருக்கும் மஹாநுபாவர்கள் "நகெ நிரஸநீயா: ஸவிதா பொரஜநீயா:" என்று ஸஹஸ்ரநாமபாஷ்யத்தில் பட்டர் அருளிச்செய்த கணக்கிலே சோசநீயர்களத்தனை.

# ஆழ்வார் திகைப்பு.

ப்ரக்ருத விஷயமாக நாம் ஸ்ரீராமாநுஜன் 105ல் மூன்றுதத்தின் மூலஸ்தான மென்றும், அம்ருதலஹரி 167-ல் நைச்சியாநு ஸந்தானமென்றும் இரண்டு விபுல வியாஸங்களை வெளியிட்டிருந்தோம். இவற்றிலுள்ள விஷயங்களுக்குப் பெரும்பாலு முகந்து சில விஷயங்களில்மட்டும் ப்ரத்யவஸ்தானம் பண்ணத் தோன்றி ஸந்தேஹங்கள் கேட்கும் முறையிலே எழெட்டு விஷயங்களை ஒரு ஆப்தர் தெரிவித்துள்ளார்; அவற்றையும் அவற்றிற்கான ஸமாதானங்களையும் விவேகிகள் தெரிந்து கொள்ளவேண்டுவது ஆவச்யகமாகையாலே இங்குத் தெரிவிக்கிறோம்.

1. பிள்ளைலோகாசாரியரும் அவரது திருத்தம்பியாரும் தம் திருத்தகப்பனார் நம்பிள்ளை திருவடிகளில் பகலெல்லாம்கேட்ட அர்த்த விசேஷங்களை இரவிலே [ஈடுமுப்பத்தாறுயிரப்படியாக] ஏடுபடுத்தி வைக்க, அதிலுள்ள அர்த்த விசேஷங்களை யாராய்ந்து கொண்டு அவற்றைப் பெய்து தாங்கள் ரஹஸ்ய க்ரந்தங்களெழுதினார்களாம்—என்று நாமெழுதி யிருந்தோம். அந்த காலத்தில் நாம் இருந்ததுமில்லை கண்டதுமில்லை. மஹான்கள் பணிக்கக் கேட்டதிது என்னுமிடம் விளங்கவே பங்க்தி விந்யாஸம் பண்ணி யிருக்கிறோம். தவிர நம்முடைய ஆராய்ச்சியிலும் ஈட்டில் ஆங்காங்குச் சிதறியுள்ள அர்த்தவிசேஷங்கள் ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீவசநபூஷணங்களில் சேரத்திரட்டப் பட்டிருப்பதாகத்தேறியது. இவை விரிவாக ஸமர்த்திக்கவும் பெறும். நிற்க. இதில் ப்ரத்யவஸ்தான மென்னவென்றால், மணவாளமாமுனிகள் ரஹஸ்யாவதாரிகைகளில் "ஆசார்ய பரம்பராப்ராப்தமான அர்த்தங்களிவை" என்றும் "அவர்கள் தாங்கள் கௌரவாதிசயத்தாலே ரஹஸ்யமாக உபதேசித்துப் போந்தவை" என்று மருளிச் செய்திருப்பதற்கு இது விருத்தம் என்று. ஸத்ர அஜ்ஞெத. இவற்றுக்குப் பரஸ்பரவிரோதம் சிறிதுமில்லை. ஈட்டில் கண்ட அர்த்தங்கள் ஸ்வகபோல கல்பிதங்களல்லவே; ஸதாசார்ய ஸதுபதேச பரம்பராப்ராப்தங்களே யல்லவோ? திருக்குமாரர்கள் உபதேசம் கேளாமல் ஏட்டையே பார்த்து எழுதி வைத்தார்களென்று சொல்லுவாரில்லையே. மணவாளமாமுனிகள்தாமும்

"ரத்நப்ரசுரமான பூஷணத்துக்கு ரத்நபூஷண மென்று பேராமாபோலே பூர்வாசார்யர்களுடைய வசநப்ரசுரமாய்..........இருக்கையாலே இதுக்கு வசநபூஷணமென்று திருநாமமாயிற்று" என்றருளிச் செய்துள்ளார். இவ்விஷ

யத்தை உபதேசரத்தினமாலையிலும் "முன்னங் குரவோர் மொழிந்த வசனங்கள் தன்னை மிகக் கொண்டு" என்று பாசுரமாக்கியருளினார். "முன்னங்குரவோர் மொழிந்த பொருள்களை மிகக் கொண்டு'என்னாமல் "வசனங்கள் தன்னை மிகக் கொண்டு—சேரச்சமைத்து" என்கையாலே பூர்வ ஸ்ரீஸூக்திகளையே கொண்டா ரென்பது நன்கு காட்டப்பட்டது. இதையே நாமெழுதி யிருந்தோமாகையாலே நிரவத்யம்.

2 ஆசார்ய ஹ்ருதயகாரருடைய அஸாதாரணமான ஸரணியொன்றை "ச்ரமணீவிதுரரிஷிபத்னிகளைப் பூதராக்கின புண்டரீகாக்ஷன் நெடுநோக்கு" இத்யாதி ஸ்ரீஸூக்தியைக் கொண்டு விவரித்துக் காட்டி, இவ்வண்ணமாகவே "மூன்று தத்தின் மூலஸ்தானத்தை மூலகாரரே தெரிவித்தருளினாரென்று நாம் பரக்க உபபாதித் திருந் தோம். இதில் ப்ரத்யவஸ்தாநமென்னவென்றால், *வளவேழுலகிலுள்ள அருவினை யேன் என்கிற சந்தையைக் கொண்டே இங்கு அருவினை என்கிற ஸ்ரீஸூக்தி பணிக் கப்பட்டதென்றும், *பொருமாநீள்படையிலுள்ள *மேல்மற்றோர் நோயும் சார்கொ டான்* என்கிற சந்தையையும், *வைகுந்தாமணிவண்ணனிலுள்ள *உள்ள நோய் களெல்லாந் துரந்து* என்கிற சந்தையையுங் கொண்டு (ஆசார்ய ஹ்ருதய ப்ரக்ருத ஸ்தலத்தில்) நோய் என்கிற ஸ்ரீஸூக்தி பணிக்கப்பட்டதென்றும் மணவாளமாமுனி களின் வியாக்கியானத்தில் ஸாதிக்கப்பட்டிராமையாலே மேலே காட்டின அருளிச் செயல் சந்தைகளை மூலகாரர் விவக்ஷித்தவரல்லர்—என்பது. சு ரு ா அதூசெ. மணவாள மாமுனிகள் தமது வியாக்கியானத்தில் மூலத்திற்குச் சார்பான அருளிச்செயல் சந்தைகளெல்லாவற்றையும் ஒன்று விடாமல் எடுத்துக் காட்டுவதென்கிற நிர்ப்பந் தத்தை வைத்துக் கொள்ளவில்லை. இது தானும் ஸஹேதுகமேயொழிய நிர்ஹேதுக மன்று. "இவை கிட்டமும் வேட்டுவாளானும் போலே" என்கிற (11) சூர்ணையில் "அந்தமும் வாழ்வுமாகிற" என்ற விடத்தில் *பல்லுயிர்க்கெல்லாம் அந்தமும் வாழ்வு மாய வெம்பெருமான்* என்கிற பெரிய திருமொழிப் பாசுரத்தை எடுத்துக்காட்ட வேண்டி யிருந்தும் காட்டியருளவில்லை. அவ்விடத்து வியாக்கியானத்தில் "அந்தமும் வாழ்வுமென்கிறவற்றில்" என்றிருக்கிறதே; அது பாசுரத்தைக் காட்டினதன்றோ? என்னில்; அவ்விடத்து மூலத்தில் (அந்தமும் வாழ்வுமாகிற) என்கிற ஸ்ரீஸூக்தி யிருக் கிறதே, அதைக்கொண்டு (அந்தமும் வாழ்வுமென்கிறவற்றில்) என்றருளிச் செய்த தத்தனை. என்றே பெரியார் பணிக்கின்றார்கள். அப்படியன்றிக்கே இது பெரிய திருமொழிப் பாசுரத்தைக் காட்டினபடிதானென்றே வைத்துக் கொள்வோம்; மேலே *வத்ஸலையான மாதா*இத்யாதி (14) சூர்ணையில் "பந்தமும் பந்தமறுப்பதோர் மருந்தும் காட்டுமிறே" என்ற விடத்தில் பந்தமுமித்யாதியான மூலத்திற்கு மூலமான பெரிய திருமொழிப்பாசுரம் காட்டப்பட்வில்லை யென்பது நிர்விவாதம்.

(கீழை மேலை வடக்கிலவை புறம்பாக) என்ற 141 சூர்ணையில், கீழை என்பதற்கு *தானுமோர் கன்னியும் கீழையகத்துத் தயிர் கடைகின்றான்போலும்* என்கிற சந்தையையும், மேலையென்பதற்கு *மேலையகத்தே நெருப்புவேண்டிச் சென்று* என்கிற சந்தையையும் சேர்த்துக் காட்டியிருக்கவேண்டும். மூலகாரர்க்குக் கீழையகமென்று கர்மயோகம் விவக்ஷிதம். தயிர் கடைதல் சொல்லுதலால் கர்மயோகம் தெரிவிக்கப்படுகிறதென்பதும் விவக்ஷிதம். தயிர் கடைகை கீழையகத்தில்தான் நடைபெறுகின்றதென்பதை * கீழையகத்துத் தயிர் கடைய * என்று குலசேகராழ்வார் மட்டும் காட்டினால்லர்; * கீழையகத்துத் தயிர் கடைகின்றான் * என்று திருமங்கையாழ்வாரும் காட்டினராதலால் இரண்டு ப்ரமாணங்களும் மூலகாரர்க்கு விவக்ஷிதமே. இனி, மேலையகமென்று ஜ்ஞாநயோகம் விவக்ஷிதம். காண்கை சொல்லுதலாலும், நெருப்பைச் சொல்லுதலாலும் ஜ்ஞாநயோகம் தெரிவிக்கப்படுகிறதென்பதும் விவக்ஷிதம். கீதையில் நான்காமத்யாயத்தில் ஜ்ஞாநாக்நிதக்தகர்மாணம் என்றும் ஜ்ஞாநாக்நிஸ் ஸர்வகர்மாணி என்றும் கூறியுள்ளபடி ஞானம் நெருப்பாதலால் * மேலையகத்தே நெருப்புவேண்டி * என்ற சந்தையானது *மேலையகத்து நங்காய்வந்து காண்மின்கள் * என்கிற சந்தைபோலவே உத்தேச்யந்தான். ஆயினும் மணவாளமாமுனிகள் அடியேனுக்குக் காட்டிக்கொடுத்தவர் வியாக்கியானத்தில் காட்டியருளாதது ஸங்க்ரஹருசியினாலத்தனை. பலப்ரமாணங்கள் காட்டக்கூடிய ஸ்தலங்களில் பெரும்பாலும் ஒரு ப்ரமாணமே காட்டி நிற்பது மணவாளமாமுனிகளின் இயல்பு.

* அழுந்தொழு மித்யாதி (127) சூர்ணையில் * விரைந்து வருமளவும் * என்றவிடத்தில் "இன்று விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான்" என்கிற திருவாய்மொழிச் சந்தையை ப்ரமாணமாகவெடுத்துக் காட்டவேண்டியிருந்தும் காட்டியருளவில்லை. "வீடு திருத்தப்போனவன் விண்ணுலகந்தர விரைந்து வருமளவும்" என்கிற ஸ்ரீஸூக்தியை யருளிச்செய்துள்ள மாமுனிகள் அந்த ப்ரமாணத்தைக் காட்டினவரேயாவர் என்று சிலர் சொல்லக்கூடும். அந்தப்ரமாணம் மாமுனிகள் திருவுள்ள மறிந்ததேயென்று இதுகொண்டு சொல்லலாமத்தனையொழிய, ப்ரமாணங்களை அவர் தனிப்படவெடுத்துக் காட்டிவருமடைவிலே காட்டி யருளவில்லை யென்பது ஊர்ஜிதமே.

இங்ஙனே எத்தனையிடங்களில் ப்ரமாணோபாதாநம் செய்தருளப்படாமலிருக்கிறதென்பதைத் தனி நூலிலே விவரித்திருக்கிறேனடியேன். இங்ஙனம் காட்டியாகவேண்டிய ப்ரமாணங்களை யெடுத்துக்காட்டாதொழிந்தது வியாக்கியானத்திற்குக் குறையன்றோவென்று சங்கிக்கவேண்டா. குறையன்று குறையன்று. "விவேகபலம் வீடுபற்று" என்கிற இரண்டாம் சூர்ணையை வியாக்கியானித்தருளுமிடத்து — "அவ்விவேகத்துக்குப் பலம் ஏதென்னச் சொல்லுகிறது (விவேகேத்யாதி.) அதாவது, இப்படி அவன் கொடுத்த சாஸ்த்ர ஜந்யஜ்ஞாநத்தாலே நல்லதும் தீயதும் விவேகிக்

B

கைக்குப் பலம்—த்யாஜ்யத்தை விடுகையும் உபாதேயத்தைப் பற்றுகையுமென்கை.'' என்று சூர்ணிகையின் வியாக்கியானத்தை முடித்திட்டு, பிறகு தனியாக "த்யாக ஸ்வீகாரமென்னுதே * விடுபற்று * என்கையாலே, *வீடுமின் முற்றவும் *அற்றிறை பற்று* என்ற ஆழ்வார் பாசுரத்தையுட்கொண்டு அருளிச்செய்தமைதோன்றுகிறது'' என்றருளிச்செய்துள்ளார். கீழும் மேலும் வியாக்கியானக்ரமம் இங்ஙனேயாயுள்ளது? இல்லை; காட்டவேண்டிய ப்ரமாணங்களை அடைவே காட்டியே வியாக்கியானம் செய்து போருகிறார். இங்குமட்டும் அந்த க்ரமம் மாறுவானேன்? என்னில்; இது வியாக்கியானத்திற்குப் புறம்புபட்ட விஷயமென்றும், டிப்பணியில் காட்டப்பட வேண்டிய விஷயமென்றும் காட்டுதற்கேயாம். இப்படி ஓரிடத்தில் காட்டிவிட்டு மற்றும் இங்ஙனேயான பலவிடங்களை யுபேக்ஷித்தருளினர் என்பது தத்துவம். இதே ரீதியிற்சேர்ந்ததுதான் (அருவினை நோய்) என்ற ப்ரக்ருதஸ்தலமும்.

மூலகாரர் அருவினை நோய் என்று ப்ரயோகித்தருளினது நாம் விவரித்த சந்தை களைக்கொண்டு அன்றாகில் அந்தச்சொல்தொடர் எங்கிருந்து சொள்ளப்பட்டதென்று கேட்கவே நேரும். தாமே தொடுத்தாரென்னில் ப்ராமாணிகர்கள் இசையார்கள். இச்சொல்லுக்கு இப்பொருள் எந்த நிகண்டிலுள்ளது? *வளவேழுலகு பாசுரத்தில் அருவினையேன் என்கிற ஒருசொல் இல்லையாகி அந்தஸ்தானத்தில் (அடியேன்) என் றிருந்துவிட்டதானால் ஒரு ஆபத்துமில்லையே. அருவினையேனென்பதை விட்டுப் பாட்டைச் சொல்லிப்பார்க்கலாமே. பார்த்தால் இது வொருவகையான தோத்திரம் என்றல்லது வேறொன்றும் நெஞ்சிற்படாது. ஆழ்வார் அகலகில்லக்கிறாரென்று எம் பெருமான் அதிசங்கிக்க அவகாசலேசமுமிராது. ஆசாரியர்கள் அப்படி அர்த்தம் செய்தருளவும் ப்ரஸக்தியிராது. ஆகவே இப்பாட்டில் அருவினையேன் என்பதுதான் உயிரானது இதிலிருந்தே அருவினையென்று கொண்டார் ஆசார்ய ஹ்ருதயகாரர்— என்பது கல்வெட்டு. இனி நோய் என்கிற சொல்லுக்கு வருவோம். * நீயும் நானு மிந்நேர் நிற்கில், மேல்மற்றோர் நோயும் சார்கொடான் * என்ற *பொருமா நீள் படைப்பாசுரத்தில் நோய் என்பதற்கு ஈட்டில் ஐந்து பொருள்கள் பணிக்கப்பட்டுள் ளன. அவற்றுள், அயோக்யதாநுஸந்தானம்பண்ணி அகலவிடுதல் என்பது மூன்று வது. இதைக்கொண்டருளினர் ஆசார்யஹ்ருதயகாரர். இனி, வைகுந்தா மணிவண்ண னில் *உள்ளநோய்களெல்லாம் துறந்து* என்றும் *செடியார் நோய்களெல்லாம் துறந்து* என்றும் (நோய்ச்சொல்) இருவிசை வந்துள்ளது. முதலிடத்தில், ''அயோக் யன் என்று அகன்று வருமவை'' என்றும், இரண்டாமிடத்தில் "அயோக்யதாநு ஸந்தானத்தாலே வந்த நோய்'' என்றும் ஈட்டிலுள்ளது. ஆக இவ்வளவுங் கொண்டு (அருவினை நோய்) என்றசொல்தொடரை மூலகாரர் அமைத்துக்கொண்டாரென்பதை, இத்தகைய விமர்சத்திற்கென்றே இட்டுப்பிறந்த நாம் விவரியாநிற்க, இதை ஆமோ திக்கவோ ஆக்ஷேபிக்கவோ இவர்களார்கொல்!

3. மூன்றாவது தத்து * அந்தாமத்தன்பில்தானென்றும், அது எம்பெருமான் தன்னாலே தன்னுடைய அழுகையைக்காட்டிப் பரிஹ்ருதமாயிற்றென்றும் எழுதியிருந்தோம். இங்கு ப்ரத்யவஸ்தாநமென்னவென்றால், ஆழ்வாருடைய அகலுதலை அதிசங்கித்த எம்பெருமான் அழுதானென்பதற்கு ப்ரமாணமில்லையென்றும், திருவாய்மொழி நூற்றந்தாதியில் 'நைகின்றதன்மைதனை' என்பதற்கு அழுததன்மையென்று பொருள்கொண்டது மஹத்தான ப்ரமமென்றும் ப்ரத்யவஸ்தானமுள்ளது. ஸமாதாநம். * வளவேழுலகில் எம்பெருமான் உலகளந்த வ்ருத்தாந்தத்தையும் வெண்ணெய் வ்ருத்தாந்தத்தையும் ஆழ்வார்க்குக் காட்டியருளவில்லை யென்று வைத்துக்கொண்டு பார்ப்போம். அப்போது ஆழ்வார் நிலைமை என்னாகும்? என்று ஒருவர் கேட்டால் என்னபதில் சொல்லலாகும்? ஆழ்வாரை இழந்தேபோக நேர்ந்திருக்கும் என்று சொல்லியாகவேண்டும். பெருமாநீள்படையில் * செல்வ நாரணனென்ற சொல்லை எம்பெருமான் ஆழ்வார் திருச்செவியில் படுத்தாதிருந்தானாகில் ஆழ்வார் நிலைமை என்னாகும்? என்று கேட்டாலும் இதற்கும் அதே பதில்தான் சொல்லியாகவேண்டும். இனி * அந்தாமத்தன்பு பதிகத்தில் ப்ராப்தமாகும் கேள்வியைக் கேளீர்; * அல்லாவியுள் கலந்த * என் முடிவுகாணாதே * என்னும் பாசுரங்களினால் எம்பெருமானுக்கு ஆழ்வாருடைய அகலுகையைப் பற்றின விசாரம் உண்டாயிற்றென்பது மறுக்க முடியாமலும் மறைக்க முடியாமலும் ஸகல வியாக்கியானங்களினாலும் ஸித்தித்திருக்கின்றது. *வளவேழுலகிலும் *பெருமாநீள் படையிலும் ஆழ்வாருடைய பேச்சிலிருந்து எம்பெருமானுக்குத்தானே விசாரமுண்டாயிற்று; அந்த விசாரத்தினால் தானே பரிஹாரவழிகளைத் தான் ஆலோசித்துச் செய்தான். இப்போதும் விசாரமுற்றவன் எம்பெருமான்; இவனே பரிஹாரம் செய்யக் கடமைப்பட்டவனுமாயினன். அந்தக் கடமையினால் என்ன பரிஹாரம் செய்தானென்று கேட்கலாகிறது. ஒரு பரிஹாரமும் செய்திலன், வெறுமனேதானிருந்தானென்று சொல்லிவிடுவர்கள். இப்படிச் சொல்லுவது ரஸிகர் சொல்லாகாது என்று திருவுள்ளம் பற்றிய மணவாளமாமுனிகள் ஈட்டுக்காரரான நம்பிள்ளையின் கருத்தை விவரிப்பவராய் * செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து நைகின்றதன்மைதனை * என்றருளிச் செய்தார். நைகின்ற தன்மையாவது என்ன? என்று விசாரிப்போம். சிதிலமாவதென்று பலரும் வியாக்கியானிக்கிறார்கள். சிதிலமாகையாவதென்ன? என்று கேட்டால் விவரித்தாகவேண்டும். திவ்யப்ரபந்தங்களில் நைதல் என்பது பல நூறிடங்களில் வருகிறது. ஏதேனுமோரிடத்து வியாக்கியானத்தையெடுத்துப் பார்க்கலாம். [நையுங் கண்ணீர் மல்க நின்று] என்றவிடம் பார்ப்போம். "[நையும்] மாதாபிதாக்கள் சோவிருக்க அவர்கள் ஸந்நிதியிலே பசித்த ப்ரஜைகளைப் போலே சிதிலையாகாநின்றாள்" என்பது ஈடு. பசித்த ப்ரஜை என்ன செய்யுமென்பதை அவரவர்கள் ஸ்வாநுபவத்திலேயே பார்க்கப் பெறலாம். மற்றோரிடமும் பார்ப்போம். "[உம்மைக் காணுமாசையுள்நைகின்றாள்] .........வாடுகைதான்

தேட்டமாம்படியாயிற்று." என்பது ஈடு. வேறோரிடமும் பார்ப்போம். "[நின்று நின்று நையும் நெடுங்கண்கள் பனிமல்கவே.] கிண்ணகத்திலிளகின கரைபோலே உடை குலைப்படுகிறபடி." என்பது ஈடு. இவற்றால் என்ன தேறிற்று? அழுவதற்கும் மேற்பட்ட — மிக மிக மேற்பட்ட ஒரு நீசதசையே நைதலாகு மென்று தேறிற்று இந்தத்தன்மையை எம்பெருமான் தானடைந்து காட்டினானாழ்வார்க்கு— என்கிறார் மணவாளமாமுனிகள். ப்ரக்ருத விசாரமெல்லாம் மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்திலே யாகையாலே மணவாளமாமுனிகளின் திருவாக்குத் தான் இதில் மிகச்சிறந்த கைவிளக்காகும். இப்படிப்பட்ட நீசதசையை எம்பெருமான் எதனால் காட்டினான்? மாறன் செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து=ஐயோ, ஆழ்வாரை இழந்துவிட நேர்ந்துவிட்டதே! என்கிற க்லேசாதிசயத்தாலே எம்பெருமான் இந்த நீசதசையைக் காட்டாதிருந்தனாகில் ஆழ்வார் நிலைமை என்னாகும்? என்று இப்போது கேட்கிறோம். * வைகுந்தாமணிவண்ணனே யென்கிறபதிகம் அவதரித்திராதென்றும், இங்ஙனே அவதரித்திராதென்றும் சொல்லித் தீரவேண்டும். எல்லார்க்கும் அபயப்ரதாநம் பண்ணுகிற எம்பெருமான்தனக்கும் ஆழ்வார்தாம் அபயமளிக்க வல்லராம்படி செய்து கொண்டானெம் பெருமான். எதனாலே? — நைகின்ற தன்மைதனைக் காட்டியதனாலே. இஷ்டஸித்தி பெறுவதற்குப் பலவுபாயங்களுண்டு; அழுது ஜயித்தல், தொழுது ஜயித்தல் என்பர்கள். * தொழுகையுமிவை கண்டவசோதை தொல்லையின்பத்திறுதிகண்டாளே * என்னும்படி எம்பெருமான் யசோதையிடத்திலே தொழுது ஜயித்தான். அங்கு அழுதலுஞ்செய்தான்; ஆனால் அது பயன்படவில்லை. ஆழ்வார் பக்கலிலேதான் அழுகை பயன் பட்டதவனுக்கு.

இதற்குமேல் ஒரு ப்ரத்யவஸ்தாநம். அதாவது, * வைகுந்தாமணிவண்ணனீட்டில் "நிர்ஹேதுகமாக உன்வடிவழகை நீ என்னை யநுபவிப்பிக்க அநுபவித்து அத்தாலே சிதிலனான நான் உன்னைவிட ஸம்பாவனையுண்டோ வென்கிறார்......... நீ பண்ணின உபகாரங்களைக் கண்டுவைத்து விட ஸம்பாவனையுண்டோ? காலத்ரயத்திலும் ஸர்வவித பந்துவுமான உன்னை விட ஸம்பாவனை யுண்டோ?" இத்யாதி ஸ்ரீ ஸூக்திகளிருக்கின்றன வென்றும், இவற்றால் உன்னுடைய போக்யதை வடிவழகு உபகாரகத்வம் ஸர்வவிதபந்துத்வம் முதலான கல்யாண குணங்களில் ஈடுபட்டமுந்தி அநுபவித்துக் கொண்டிருக்கிற நான் உன்னை விட ப்ரஸக்தியுண்டோ வென்று சொல்லுவதாகத் தேறுகிறதேயல்லது அவனுடைய அழுகைக்காக விடமாட்டேனென்று சொல்லுவதாகத் தேறவில்லையென்றும் ப்ரத்யவஸ்தாநம். ஸமாதானம் அதிசெ. குமாரனை விட்டிட்டுத் தாயார் ஊர்போக முயன்றவளவிலே குமாரன் அழத்தொடங்க அவ்வழுகைக்கிரங்கின தாயானவள் பயணத்தை நிறுத்திக்கொண்டு, பயலே! அழகியனாய் ஸமர்த்தனாய் விதேயனாய் என்னைச் சிந்தை கவர்ந்தவனாயிருக்கிற வுன்னை விட்டிட்டு நான் போவேனோ? என்கிறாள். இது உலகில் நடைபெறுவதேயன்றி

அஸம்பாவித மன்று. இத்தால் தாயானவள் பயனத்தை நிறுத்திக் கொண்டது குமாரனது அழுகையினால் — என்கிற தத்துவத்தை இல்லை செய்ய முடியுமோ? குமாரனை நோக்கிச் சொன்ன வார்த்தைகள் அத்தோடு விருத்த மென்றுவது அன்றுத மென்றுவது நெஞ்சால்தான் நினைக்கப் போமோ? உன்னைவிட்டுப் போக மாட்டேனென்று தாய் சொன்னதற்கு உண்மையான முதல் ஹேது குமாரனுடைய அழுகைதான். பிறகு அவனுடைய குணங்களைச் சொல்லிச் சொல்லி உன்னை யெப்படி விட்டுப்போவேனென்றதற்கு ஹேது அவர்ஜநீயமான குணநுாகம். அதுபோலவே யிங்கும் *உன்னை நான் பிடித்தேன்கொள் சிக்கனவே* இத்யாதிகள் சொன்னதற்கு ஹேது வைகுந்தன் நைகின்றதன்மைதனைக் கண்டதுவேயாகும். பிறகு அவனது வடிவழகு முதலியவற்றைச் சொல்லி உன்னை யெங்ஙனம் விடுவேனென்றதற்கு ஹேது இயற்கையான ஈடுபாடு. ஆகவே, எடுத்துக்காட்டின ஈட்டு ஸ்ரீஸூக்திகளோடு விரோதகந்தமுமில்லை. இந்த ஆக்ஷேப மெல்லாம் மாமுனிக ளின் மீதேயேறும்.

4. *வளவேழுலகு ப்ரவேசத்தில் எம்பெருமானை விட்டகன்ற ஆழ்வார்க்கு—(உத்தர ஸ்ரீராமாயண கதையின்படி) பெருமாளுடைய ஆணைக்கு மாறுக தூர்வாஸா வைப் பெருமாளருகே புகவிட்டுப் பெருமாளையகன்றுபோன இளைய பெருமாளையும், இளைய பெருமாளால் காட்டில் கொண்டுவிடப்பட்டு அகன்றுபோன பிராட்டியையும் த்ருஷ்டாந்தமாகக் காட்டியிருக்கையாலும், இளைய பெருமாளுடையவும் பிராட்டியி னுடையவும் அகலுதல் ஸத்யமே யொழிய அஸத்யமன்றுகையாலும் இந்த த்ருஷ் டாந்த பலத்தாலும் ஆழ்வாருடைய அகலுதல் உண்மை யென்று ஸித்திக்கிறதென்றும்; ப்ரவேசத்தின் முடிவிலே, அகன்ற ஆழ்வாரை வருந்தி யிசைவித்துக் கொண்டதற்கு த்ருஷ்டாந்தமாக, யுத்தஞ் செய்யமாட்டே னென்று மீண்ட அர்ஜுநனை யுத்தத்திலே மூளப்பண்ணினபடியை த்ருஷ்டாந்தமாகக் காட்டி யிருக்கையாலே அதனாலும் அர்ஜுனனுடைய யுத்தாந்நிவ்ருத்தி போலே ஆழ்வாருடைய நிவ்ருத்தியும் ஸத்யமே யென்று தேறுகின்ற தென்றும் ஒரு ப்ரத்யவஸ்தானம் தோன்றியுள்ளது. நாம் பல விடங்களில் "எம்பெருமானைவிட்டு அகலவேணு மென்று ஆழ்வார் ஒருகாலும் நினைத் தவரல்லர் நினைப்பவருமல்லர்—அகன்றரென்பது எங்குமே வஸ்து ஸ்திதியில் கிடை யாது; ஆழ்வார் நம்மை விட்டிடுவரோ வென்று எம்பெருமான் அதிசங்கித்ததுதா னுள்ளது—*வளவேழுலகில் அகன்றரென்றும் * பொருமாநீள் படையில் அகன்று ரென்றும் எம்பெருமானுடைய அதிசங்காரூபமான அகல நினைத்தல் தவிர வேறு எதுவும் கிடையாது—" என்றெழுதி யிருப்பவற்றின்மேல் மேலேகாட்டின ப்ரத்யவ ஸ்தானம் தோன்றியுள்ளது.

ஈதெூா அத்ர. இளைய பெருமாளையும் பிராட்டியையும் த்ருஷ்டாந்தமாகக் காட்டி யிருப்பது எந்த அம்சத்திற்காக என்பது நாம் விவரித்துக் காட்டவேண்டாத

படி ஈட்டிலேயே ஸ்பஷ்டமாக வுள்ளது. அவர்கள் எவ்வளவுதூரம் அகன்றார்களோ அவ்வளவுதூரம் ஆழ்வாரும் அகன்றாரென்பதற்காகவா காட்டியுள்ளது? அன்று அன்று. கேண்மின். ஆழ்வார் எம்பெருமானைவிட்டு அகல நினைத்தாரென்று நம் பிள்ளையருளிச் செய்தவுடனே 'அந்தோ! இப்படிகூட ஒரு நினைவு உண்டாகத் தகுமோ? அகலநினைப்பதோ அகல்வதோ இதெல்லாம் ஆத்மவிநாசந்தானே; இதனை ஸ்வயமேவ தேடிக்கொள்வதுமுண்டோ?' என்று சிலர் சங்கிக்க நேர்ந்தது. அதற்குப் பரிஹாரமுணர்த்துகையில், சேஷிக்கு அதிசயத்தை விளைக்கையே சேஷபூதன்பணி; அந்த அதிசயாதாநம் எந்தவிதத்தினுமுண்டாகத் தக்கதே; அது ஆத்மோஜ்ஜீவனத்தினு முண்டாகவுமாம், ஆத்மவிநாசத்தினுமுண்டாகவுமாம்; அது விஷயமன்று; சேஷ்ய திசயாதானமே முக்கியமானது. அதிலே நோக்குடையவர்கள் க்ருத்யாக்ருத்ய விவேகம் பண்ணார்கள்—என்பதுதான் இங்கு நம்பிள்ளை யருளிச்செய்துள்ள விஷயம். ஸ்ரீவசநபூஷணத்தில் பிராட்டியினுடைய மூன்று பிரிவுகளை ப்ரஸங்கித்து அருளிச் செய்யுமிடத்தில் "நடுவிற் பிரிந்தது பாரதந்த்ர்யத்தை வெளியிடுகைக்காக" என்றதை வியாக்கியானத்துடன் குருமுகமாகக் கேட்டவர்கள் கலங்கார்கள். *தவஜெயம் ஸாவவ வஸெ ஹத-உ-ஈ-உா வரிஹாஸெஓ சி* என்கிற பிராட்டியின் வசனம் இங்கு ஈட்டில் காட்டப்பட்டுள்ளது. இதை நன்றாக விவரித்தருளினவர் விசதவாக்சிகா மணிகளே. மேலே காட்டின வசனம் பிராட்டி பெருமாளைவிட்டு அகன்றதற்கு ப்ரமாணமன்று; ப்ரமாணமாவதற்கு ஔசித்யமுமில்லை. பின்னை எதற்கு ப்ரமாண மென்னில்; தனக்கு அசிந்திதமாக நேர்ந்த மஹத்தான கஷ்டத்தினால் கங்கையில் விழுந்து உயிரைமாய்த்துக் கொண்டுஸுகிக்க வேண்டியிருந்தும் அது செய்யமாட்டா மைக் குறுப்பான பாரதந்திரியத்திற்கு ப்ரமாணம். பாரதந்த்ரிய மென்பது சேஷ்யதி சயாதானத்தின் எல்லை நிலமாகையாலே அதை இங்கெடுத்துக் காட்டினது மிகவும் உப பந்நம். இளைய பெருமாள் பெருமாளைப் பிரிந்துபோய் ஸரயுவில் ச்வாஸபந்தம்பண்ணி உயிரைவிட்டார். பிராட்டி தான் உயிரைவிட மாட்டாமை சொன்னாள். அவர் உயிரைவிட்டதும், இவள் உயிரைவிட மாட்டாமை சொன்னதும் இங்கு விஷயமன்று; இருவரும் ஸ்வலாபத்தைக் கணிசியாதே சேஷிக்கு அதிசயத்தை விளைக்கத் தேடின தொன்றுதான் விஷயம். இவற்றால் பூதஸ்வரூபர்களுக்கு ஸ்வல்பலாபமுமில்லை. கீதாசார்யன் போர்புரியமாட்டேனென்ற அர்ஜுனனை *கரிஷ்யே வசநம் தவ* என் னப்பண்ணி இசைவித்ததை த்ருஷ்டாந்தமாகக் காட்டியருளினதும் இன்சுவை மிக்கது; அர்ஜுனன் போர்புரிய மாட்டேனென்றது *ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண!* இத் யாதி அப்ரகம்ப்யப்ரமாணஸித்தம். ஆழ்வார் அயோக்யதாநுஸந்தானம்பண்ணி அகல நினைத்ததும் அப்ரகம்ப்ய ப்ரமாணஸித்தம். அந்த ப்ரமாணமாகிறது *தளர் வுற்று நீங்கநினை மாறனை* என்கிற மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்தி. அகன்ற தன்று, அகல நினைத்தது ப்ரமாணஸித்தம். அர்ஜுனனும் ஓடவில்லை, ஆழ்வாரும் ஓடவில்லை. அர்ஜுனன் ரதோபஸ்தே உபாவிசத்; ஆழ்வார் பத்மாஸநே உபவிஷ்ட:.

அர்ஜுநனுடைய நிவ்ருத்தியோடு, ஆழ்வாருடைய நிவ்ருத்த்யநுவதையோடு வாசியில்லை யென்பதையும், அதிலும் இது மிகக் கொடிதென்பதையும் நன்கு இசைவோம். அதை நிவர்த்திப்பித்தது போலே இதையும் எம்பெருமான் நிவர்த்திப்பித்தானென்பதை மறுப்பாரார்? நாமும் இதை நம்முடைய திவ்யார்த்ததீபிகை முதலான வியாக்கியானங்களிலே போரப் பொலிய எழுதியே யிருக்கின்றோம். விஷயம் புத்தியில் ஆரோஹிப்பதற்கு ஆழ்வார் அகன்றுரென்றும் குட்டிச்சுவரிலே போய் முட்டாக்கிட்டுக்கொண்டு கிடந்தாரென்றும் சொல்லியாக வேண்டி யிருக்கிறதென்பதை நாம் க்ரஹியாமலில்லை. இதை வெகு அற்புதமாக ப்ரவசநமும் செய்து போருகின்றோம்.

ஒரு பெரிய விஷயம் காண்மின், கேண்மின். ஸ்ரீவசநபூஷணத்தில் "இதிஹாஸ ச்ரேஷ்டமான ஸ்ரீராமாயணத்தால் சிறையிருந்தவளேற்றஞ் சொல்லுகிறது" என்றவிடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் ஆச்சரியமான பரமார்த்தத்தைப் பூச்சொரிந்தாப்போலே சொரிந்தருளியுள்ளார். உலகில் ஸ்ரீராமாயண ப்ரவசநகர்த்தாக்கள் எத்தனைவருளரோ அத்தனைவரும் ஒன்று சேர்ந்து கனமாக ஆக்ஷேபிக்கக் கூடிய விஷயத்தை யாயிற்று மாமுனிகளருளிச் செய்திருப்பது. "பிராட்டியென்னுதே சிறையிருந்தவளென்றருளிச் செய்தது" என்று தொடங்கி ஸாதித்து வருகையில் சிறையிருப்பின் சிறப்பை உபபாதித்தருளியிருப்பது நிற்க; அதற்குமேலே "இத்தை ராவண பலாத்காரத்தாலே வந்ததாக நினைப்பார் இவள் ஸக்திவிசேஷ மறியாத க்ஷுத்ரரிறே; * சீதோ பவ * என்றவள் 'நஷ்டோ பவ' என்னமாட்டாளன்றே; ஆகையாலே இது தன்னநுக்ரஹத்தாலே பரரக்ஷணார்த்தமாகச் செய்த செயல்." என்றருளிச் செய்திருப்பது வடிக்கட்டின தத்வார்த்தமென்பது ஸாரஜ்ஞர்களின் கோஷ்டியிலே ஸம்ப்ரதிபந்நம். இதை இலேசாக இசைவார்களோ மற்றையோர். இது ராவணபலாத்காரத்தாலே வந்ததன்றிக்கேயிருந்தால் * சுரிகுழற்கனிவாய்த் திருவினைப் பிரித்த கொடுமையிற் கடுவிசையரக்கன் * என்பது போன்ற பல நூறு பாசுரங்களினால் தத்வதர்சிகளான ஆழ்வார்களுங்கூட ராவணனை அளவுகடந்து நிந்தித்திருக்கிறார்களே இது எதற்காக? என்று நம்மவர்களே க்ஷேபிக்கத் தலைப்படுகிறார்கள். அன்னவர்களுக்கு நாம் எவ்வளவு தத்துவமுணர்த்தினாலும் பயன்படுவதில்லை. பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ — உத்தர சதகத்தில் ஸ்ரீராமாவதாராநுபவபரமான * மநுஜஸமயம் க்ருத்வா * என்னும் ச்லோகத்தில் * க்வசந விபிநே ஸா சேத் அந்தர்த்திர்ம விநிர்மமே * என்றார். அதாவது, உலகில் சிறுவர்களும் சிறுமிகளும் கண்ணு மூச்சிவிளையாட்டென்று ஒரு விஹாரம் செய்வதுண்டு; வேணுமென்று தானே சென்று ஓரிடத்தில் மறைந்து கொள்வது இந்த விளையாட்டின் செயல்; இவ்வண்ணமாகவே பிராட்டியும் ஒரு விளையாட்டுச் செய்ததத்தனையே யென்றபடி. இதனாலும், பிராட்டி ராவண பலாத்காரத்தாலன்றிக்கே தானாகவே ராவணபவனத்திற் சென்று புகுந்துகொண்டா

ளென்பது நன்கு தேறுகின்றது. இப்படி யருளிச்செய்த பட்டர் அந்த ச்லோகத்தி லேயே உத்தரார்த்தத்தில் * கிமத ஜலதிம் பத்த்வா * என்று தொடங்கிப் பெருமாளை நோக்கி ஒரு கேள்வி கேட்கிறார். பிரானே! பிராட்டி தானாகவே சென்று லங்கை யிலே மறைந்து கொள்ள, இதற்காகக் கடலிலே அணைகட்டுவதும், அரக்கர்தங்கள் இனம் கழு கேற்றுவிப்பது மான ஸம்ப்ரமங்களைச் செய்தருளிற்றே! இவையெல் லாம் என்றிய? என்றுயிற்றுக் கேள்வி கேட்டிருப்பது. பட்டர் மாமுனிகள் போல்வார் தத்வதர்சிகளாகையாலே ஸமாதானம் அவர்கள் திருவுள்ளமறிந்திருக் கிறது உண்மை. ராமாயணாதிகளிலுள்ள கதாசரீரமல்லது வேறொன்றறியாத நம் போல்வார்க்கு என்ன தெரிந்தது. "தாயும் தாப்பனும் சேரவிருக்கப் பொறாத பையல்" என்றிது போன்ற நூற்றுக்கணக்கான ஆசார்ய திவ்யஸூக்திகளை ஸேவிக்கிறபோதும், * பஞ்சேனச் சிவக்கு மென்காற் பாவையைப் பிரித்த பாவி வஞ்சன் * (கம்பர்) என்றிது முதலான பாட்டுக்களை ப்ரவசனம் செய்கிறபோதும் முன்னே காட்டிய ஸ்ரீவசநபூஷண வியாக்கியான ஸ்ரீஸூக்தியை [அதாவது, "இத்தை ராவண பலாத்காரத்தாலே வந்ததாக நினைப்பார் க்ஷுத்ரரிறே" இத்யா தியை] மறைத்துவைக்கவும் மறந்திருக்கவுமன்றோ ப்ராப்தமாகிறது.

இவற்றுள் எது பரமார்த்தம்? எது ப்ரபலம்? என்று பார்ப்போமாயின், பிராட்டி இலங்கையிற் புக்கது ராவண பலாத்காரத்தாலன்று என்னு மர்த்தந்தான் பரமார்த்தமும் ப்ரபலமுமாகும். ஆனால் அது தத்வோத்போதக ஸமயவிசேஷத்தில் மட்டும் அநுஸந்தேயமாகுமேயொழிய ஸதா ஸர்வதா அநுஸந்தேயமாக வழியில்லை. ஸமயே ப்ராப்தே இந்த பரமார்த்தத்தை யெடுத்து வெளியிடாதிருக்கவொண்ணாது. இது போலவே ஆழ்வார் அகன்றார்; அகன்று நெடுந்தூரஞ் சென்றார்; சென்று ஒரு குட்டிச்சுவரிலே புக்கார் இத்யாதிகளையும் ஒருகால் சொல்லிக்கொண்டிருக்க வேண் டியதே; "வஸ்து ஸ்திதி அப்படியில்லை" யென்று பரமார்த்தமும் வெளியிடப்பட வேண்டியதே. * ந தே வாக் அந்ருதா காவ்யே காசிதத்ர பவிஷ்யதி * என்று வரம் பெற்ற வால்மீகிபகவான் எழுதிவைத்ததெல்லாம் ஸத்யமாயிருக்கச் செய்தேயும் அது தன்னிலே மஹாவிவேகிகள் பரமார்த்தம் கண்டு அதை ரஹஸ்யத்திலிட்டு அநுபவிக் குமாபோலே, நம்பிள்ளை போன்ற நம் ஆசார்ய ஸார்வபௌமர்கள் அருளிச் செய் தவை யெல்லாம் ஸத்யமாயிருக்கச் செய்தேயும் அது தன்னிலே பரமார்த்தம் காண் பதும் காட்டுவதும் அவர்ஜநீயமாகு மத்தனை.

இங்ஙனே தேறும் பரமார்த்தத்தினால்,—ஆழ்வார் அகலவேணு மென்கிற எண்ணத்தோடே நைச்சியாநு ஸந்தானம் பண்ணினவரல்லர்; ப்ரேமாந்தனான எம்பெருமானுடைய திருவுள்ளத்தில் அங்ஙனே அதிசங்கை தோன்றுகிறது; அவ்வதிசங்கையினால் ஆழ்வாரை அகலவிடாதே அத்தாணிச் சேவகத்திலே யீடுபடுத்

திக்கொள்ள வழிதேடவேண்டியதாகிறது; ஒவ்வொரு ஸமயத்தில் ஒவ்வொருவழியாலே யீடுபடுத்திக் கொள்ளும்படியான சதிரையுடையனாயிராநின்றானவன்; முதல் தத்திலே உலகளந்த அபதானமும் வெண்ணெய்க் கதையுமாகிற வழி கிடைத்தது. இரண்டாம் தத்திலே ஸ்ரீமந் நாராயணா வென்று சொல்லித் தலைச்சுமையை யிறக்க வல்லவொரு வழிப்போக்கன் தைவாதீனமாகக் கிடைத்தான். மூன்றாம் தத்திலே ஒருவழியும் கிடைக்காமற்போக "ஒருவழியாலும் பசை காணாதொழிந்தால் அப்ராப்ய மென்று கண்ணநீரோடே மீளுவது" என்று ஸ்ரீவசநபூஷணத்திலுண்மை யறிந்தருளிச் செய்த கணக்கிலே கண்ணநீரோடே மீளுவதாயிருக்கையில் அந்தக் கண்ண நீர்தானே ஒரு ஸதுபாயமாகத் தலைக்கட்டிற்று. 'பிரானே! ஏதுக்குக் கண்ண நீர் பெருக நிற்கிறாய்? நான் அகல்வேனென்றா? அந்தோ! என்கோலம் மான் திருவருள்கள்! நானோ உன்னைவிட்டு அகல்வேன்? இப்படியும் ஒரு நிர்விஷயக ப்ரம முண்டோ? என்னை இவ்வளவு அரஸிகனாக எண்ணிவிட்டாயே!' என்று இனையபலவும் சொல்லிக்கொண்டு ஆழ்வார் அணுகும்படியாக வாயிற்று.

துர்வாஸாவை உள்ளே புகவிட்ட இளைய பெருமாளையும், அவரால் திருத்தேரிலேகொண்டுவிடப்பட்ட பிராட்டியையும் வளவேழுலகு ப்ரவேசத்தில் த்ருஷ்டாந்தமாகக் காட்டினது அவர்களைப்போலே ஆழ்வாரும் அகன்றானென்கைக்கு— என்று க்ரஹித்ததுமட்டும் அத்யந்த சோசநீயம். பெரிய திருமொழியில் கோவிந்த ஸ்வாமியென்பானொருவனுடைய கதையைச் சொல்லுகிற * மாகமாநிலம் முழுதும் வந்திறைஞ்சு மென்கிற பாட்டின் பின்னடி—

"போகம் நீயெய்திப்பின்னும் நம்மிடைக்கேபோதவாயென்ற பொன்னருளெனக்கும்
ஆகவேண்டுமென் றடியிணையடைந்தே னணிபொழில் திருவரங்கத்தம்மானே"

என்றிருப்பதைக்கண்ட சிலர் "திருமங்கையாழ்வார், தோகைமாமயிலன்னவர்சிற்றின்ப போகங்களைத் தமக்கு முன்னம் தந்து, பின்னை திருவடி சேர்த்துக்கொள்ளும்படி பிரார்த்திக்கிறார்" என்று பொருள் உபந்யஸிப்பதுண்டு. 'அவனுக்குத் தந்த பொன்னருளே எனக்கு மாகவேண்டும்' என்று பாட்டில் வ்யக்தமாக இருப்பதால் இப்படித்தானே பொருள் உபந்யஸித்தாக வேண்டும். நிற்க.

5. "எம்பெருமானுடைய கதையே நமக்கு வேண்டாமென்று வெறுத்து ஆழ்வார் விலகுவதென்பது ஒருநாளுங்கிடையாது" என்றெழுதிய நாமே, பொருமா நீள்படையிலுண்டான தத்தை எம்பெருமான் பரிஹரித்த விதமின்ன தென்று விவரிக்குமிடத்தில்— "இனி பகவத் விஷயகதையே நமக்கு வேண்டாமென்று உறுதி கொண்ட ஆழ்வாருடைய பரிஸரத்திலே ஒருவனைப் போகவிட்டு அவன்வாயால்

ஸ்ரீமந்நாராயணவென்று சொல்லுவித்து அம்முகத்தாலே ஆழ்வாரை அகலவிடாமல் ஈடுபடுத்திக்கொண்டது'' என்றெழுதியிருக்கிறோமாம். இது பரஸ்பர விருத்தமாயிருப்பதோடு ஸ்வஸித்தாந்தந்தை நெகிழவிட்டபடியுமாகிறது — என்றொரு ப்ரத்யவஸ்தானம். இது க்ராந்திரசைலியறியாமையினாலாயது. இனி பகவத்விஷய கதையே நமக்கு வேண்டாமென்று விலகி ஒரு குட்டிச்சுவரிலேபோய்ப் புக்கார் என்று நம்பிள்ளையருளிச்செய்திருப்பது கிடையாதென்றாவது, அது அஸம்பத்தமென்றாவது நாமெழுதியிருப்பதுண்டோ? அப்படி நெஞ்சிலும் நினைத்ததில்லை. அது ரஸகநமான வார்த்தையென்று கொண்டாடியே யெழுதியிருக்கின்றோம். அந்த ரஸோக்திக்கு எவ்வளவிலே தாத்பர்யமென்பதை அலசியலசி நிஷ்கர்ஷித்திருக்கிறோம். யதாச்ருதமான ஈட்டு ஸ்ரீஸூக்தியை யநுஸரித்து அதன் சாயையிலேயே நாமெழுதியிருப்பது நிஷ்கர்ஷவிருத்தமாக வழியில்லை. ப்ரபத்தி உபாயமன்றென்று பலகாலுமருளிச்செய்த பிள்ளை லோகாசார்யர் ''ப்ரபத்த்யுபாயத்துக்கு'' என்றருளிச்செய்திருப்பதைக்காட்டி 'இது ஸ்வோக்திவ்யாஹதம்' என்றெழுதியிருப்பாருமுளர், திருமந்த்ரம் ப்ரேமத்தோடே பேணியநுஸந்தித்தாலொழியக் கார்யகரமாகமாட்டாதென்று ஓரிடத்திலே பணிப்பதும், ''சொல்லும் க்ரம மொழியச் சொன்னாலும் தன்ஸ்வரூபம் கெட நில்லாது'' என்று மற்றோரிடத்திலே பணிப்பதுமானவிவை வ்யாஹதம் என்பாருமுளர். இங்ஙனே பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளிலே பலபல வ்யாகாதங்களைக் கூறுமவர்கள் திரளிலே இவர்களும் சேர்ந்தால் வியப்பென்னோ! பிராட்டி ராவண நிர்ப்பந்தத்தாலே சிறைபுகுந்தாளல்லள் என்று தத்துவத்தையருளிச்செய்துவைத்த மணவாளமாமுனிகள் தாமே ஸ்ரீராமாயணார்த்த ப்ரவசநகாலங்களிலே ராவணனுடைய நிர்ப்பந்தங்களையும் அவற்றைப் பொறுக்ககில்லாத பிராட்டியின் பிரபலமான ஆக்ரந்தன ஆக்ரோசங்களையும் பரக்க வுபந்யஸித்தருளா நின்றால் ''ஆக்ரந்தனமெதற்காக? தானே ஆசைப்பட்டன்றோ சிறைபுக்காள்; அப்படிப்பட்டவள் பழம்நழுவிப் பாலில்விழுந்தது! என்று உகந்திருக்கவேண்டியது ப்ராப்தமாக *மாயும்வகை விஷசஸ்த்ரங்கள்தேடி, ஹா ராம ஹா லக்ஷ்மண வென்று கத்தி, பரமதயாளுவை நிர்தயனென்று நிந்தித்து, வேண்யுத்க்ரதநத்திலு மொருப்பட்டதாக தேவரீருடைய திருவாக்கினால்கூடவா ஸாதிப்பது!'' என்று யாரேனும் கேட்டிருந்தால் அதற்கு என்ன ஸதுத்தரம் ஸ்வாமி தம்மாலருளிச் செய்யப்பட்டிருக்குமென்பதைக் குறித்து ஸஹ்ருதயஹ்ருதயங்கமமான வோருபந்யாஸநூலை இந்த ஆதூவஹோதாக்கள் விபுலமாக எழுதிவைத்தால் உலகமுய்யுமே. இனியாகிலுமிவர்கள் * வம்பார்வினுச் சொல்லவோ எம்மைவைத்த திவ்வான்புனத்தே* என்று நாம் வெறுப்படையவேண்டாதபடி, தேனும்பாலுங் கன்னலுமமுதுமான ஆசார்ய ஸ்ரீஸூக்திகள் பலவற்றிலும்புக்கு ரஸவத்தமான அர்த்த விசேஷங்களையெடுத்து விவரித்து உபஹரிப்பர்களா?

6. ஆழ்வார் அகன்று விடுவரோவென்று எம்பெருமான் அதிசங்கித்தது தவிர அகலவேணுமென்கிற நினைவு ஆழ்வாருடைய வுள்ளத்தில் ஒரு மூலையிலு முறைந்ததில்லை — என்னுமிதனை ஜயபேரி முழங்கச் சொல்லுவோம் நாம். இதனை யுள்ளபடி மறுக்கவேணுமாகில் ஆழ்வார் திருவுள்ளத்தை வெட்ட வெளிச்சமாகக் காட்டவல்ல அவர்தம்முடைய திருவாக்கைக் காட்டியன்றோ மறுக்கவேணும். "வ்யாக்க்யாநவாசஸ்பதிகளான ஆசாரியர்கள் ஆழ்வார்கருத்தை உள்ளபடி யறிந்து தானே வியாக்கியானம் செய்தருளுகிறார்கள்; அவர்களது திருவாக்கிலே கண்டால் அது ஆழ்வார் திருவாக்கிலே கண்டயடியன்றோ?" என்று கேட்க இவர்கள் முன்வர வேணும். வம்மின் புலவீர்! ஆழ்வார் அகன்றதாகவோ அகல நினைத்ததாகவோ எந்த ஆசாரியர்கள் வியாக்கியானம் செய்தருளினார்களோ, அந்த ஆசாரியர்கள் தாமே மருமத்தை விளக்கிவைத்தார்களே. அது எங்கே எங்ஙனே யென்னில்; ஆழ்வார் அகல்வதென்பது அவனுடைய சில குணாநுஸந்தானத்தின் ப்ரகார பேதமிருந்தபடி யென்று நம்பிள்ளை காட்டியிருப்பதை முன்னைய நூல்களில் பரக்க வுபபாதித்தோம். பிஷ்ட பேஷணம் எவ்வளவு செய்வது? நாமொரு மஹாபாரதமன்றோ எழுதி யிருக்கிறோம். காகத்தின் மீது ப்ரஹ்மாஸ்த்ரம்விட்ட அபக்ஷ்யாதி பெருமாளுக்கு மட்டுமா?

எம்பெருமான் பரிஹாரம் பண்ணிருந்தாலும் ஆழ்வார் மேற்பாட்டுத் தொடங்குவரென்று நாமெழுதியிருப்பதாக வைத்து வசைபாடுவது அறக்தோ பாலம்பம். எம்பெருமான் பரிஹாரம் பண்ணாமல் எங்ஙனே யிருந்திடுவன்? இருந்த தில்லையே. இவர்களையே கேட்போம், * வளவேழுலகு முதற்பாட்டில் நைச்யாநு ஸந்தானம் பண்ணி அகன்றாரே ஆழ்வார்; அப்போது எம்பெருமான் அதற்கு என்ன பரிஹாரம் பண்ணினான்? ஒன்றும் பண்ணிற்றிலன்; பண்ணியிருந்தா லெடுத்துக் காட்டலாமே. ஒன்றும் பண்ணவில்லை யென்பது திண்ணம். அதனால் ஆழ்வார் இரண்டாவது பாட்டு அருளிச்செய்யாது வாளாவிருந்தாரோ? அவர் தாராளமாகப் பேசிக் கொண்டுதானே யிருந்தார். இரண்டு பாட்டுக்கள் பேசித் தலைக்கட்டின பின்பு பரிஹரிக்கப்பார்த்தவன் முதற்பாட்டுச் சொன்னவுடனே துணுக்கென்று பரிஹரித் திருக்க வேண்டாவா? குழந்தை நெருப்பினருகே போக முயலும்போதே தாய் விலக்கவேணும்; நெருப்பில் கையை வைத்தவுடனேயாவது விலக்கவேணும். ஒருகை யைவைத்து, மற்றொருகையையும் வைத்தபிறகு விலக்கினா னென்றால் இதற்கு ஏதே னும் அர்த்தமுண்டோ? இத்தகைய கேள்விகள் நாம் கேட்கத்தகாது; சில அவிவேகி கள் இங்ஙனே கேள்விகள் கேட்டால் விரைந்தெழுந்து விடையிறுக்கக் கடமைப் பட்டுளோம் நாம். ஆயிருந்தும் இங்கே இத்தகைய கேள்விகள்கேட்பது திகைத் தாரைத் தெளிவிக்கைக்காகவே. ஆழ்வான் அதிமாநுஷஸ்தவத்திலே — ஸ்ரீராமா!,

மநுஜத்வ சௌலப்யத்தாலே மாயமான் பின்னே சென்று பிராட்டியைப் பிரிந்து அழுது புலம்பி அவள் போனவழி தெரியாமல் மரமே! நீ பார்த்தையா? மயிலே! நீ பார்த்தையா வென்று கேட்டுக்கொண்டு திரியா நிற்கையிலே பெரிய வுடையார்க்குப் பரமபதத்திற்கு வழிகாட்டினையே, இது எங்ஙனே பொருந்தும் பிரானே! என்று மடிபிடித்துக் கேள்விகேட்டிருக்கிறார். இது ஆழ்வான் கேட்கக் கூடிய கேள்வியா? கேள்வியின் கருத்தையறிவாரார்?

ஈடுமுப்பத்தாறாயிரப்படி. மேல் * கேசவன் தமரில் பத்தாம் பாட்டில் * மருடியேலும் விடேல் கண்டாய்* என்றவிடத்து ஈடு—

“ உனக்கொரு பிச்சுண்டிறே அவன்வைலக்ஷண்யத்தைப் பாரா வருவது — நாம் இவ்விஷயத்தை தூஷிக்கையாவதென்! என்று அயோக்யதாநுஸந்தானத்தாலே அகலப் பார்ப்பதொன்றுண்டு; அத்தைத் தவிரப்பார்கிடாய் ”

என்பது.

மருடியேலு மென்பதற்கு இங்ஙனே பொருள் கொண்டது ஈட்டில் மட்டுமன்று; ஒன்பதினாயிரப்படி இருபத்து நாலாயிரப்படி பன்னீராயிரப்படி ஆக எல்லாப் படிகளிலுமிது காண்கிறது. இத்தனை வ்யாக்யாதாக்களுடைய திருவுள்ளத்தின்படி ஆழ்வார் அயோக்யதாநுஸந்தானத்தாலே அகலப்பார்ப்பதென்று ஒன்றுண்டு என்பதை வ்யாக்யாதாக்களைவிட அதிகமாகவே நாமறிந்திருக்கிறோம். மேலே காட்டிய (மருடியேலும்) விஷயம் இவர்களுடைய திருக்கண்களில் படமாட்டாதாயினும் நம்முடைய நிதர்சனத்திலேயுள்ளது. * தளர்வுற்று நீங்க நினைமாறனை * என்கிற மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியில் இல்லாத விஷயமன்று அது. ஆழ்வார் அகல நினைத்தார், அகன்றார் என்று சொன்னாலொழிய மேற்பாசுரங்கள் ரஸிக்கமாட்டா. திருவாய்மொழியை ஆழ்வார் தொடங்கிவிட்டாலும் அதை எடுப்பும் சாய்ப்புமாக நடத்திக்கொண்டுபோகிறவன் எம்பெருமானுகையாலே ஸமயாநுகுணமாக அவன் தன் திருக்குணங்களை யநுபவிப்பிக்கிறான். சிலகுணத்தை யநுபவிப்பிக்கும்போது ஆழ்வாரிடத்திலே அகல்வதையோ அகலநினைப்பதையோ கண்டாலொழிய ரஸப்படாது. *என்னை நெகிழ்க்கிலு மென்னுடை நன்னெஞ்சந்தன்னை யகல்விக்கத் தானுங்கில்லான்* என்னுமாழ்வாரோ அகலவும்மாட்டார், அகல நினைக்கவும்மாட்டார். அர்ஜுனனை வ்யாஜீகரித்து கீதாசாஸ்த்ரத்தை வெளியிடநினைத்த கண்ணபிரான் ‘நிர்வேதமில்லாதவனுக்கு இதை நாம் உபதேசித்தால் ரஸப்படாது’ என்று நினைத்தே அவனை நிர்வேதத்துக்கு ஆளாக்கி அகலவடித்து அவனை இசைவிக்கிற வியாஜத்தாலே தனக்கு உத்தேச்யமான கீதாசாஸ்த்ரப்ரகாசநத்தை நடத்திக்கொண்டான். இங்கு ஆழ்வாரிடத்திலே தனது நிகரற்ற சீலகுணாநுபவத்தைச் செய்விக்க நினைத்த எம்பெருமான் இது ரஸப்படுவதற்காக ஒரு அதிசங்கையைத்தானேறிட்டுக்கொண்டான். * உள்ளுவாருள்

ளிற்றெல்லாமுடனிருந்தறியவல்ல சக்தி எம்பெருமானுக்கிருப்பதுபோலே அவனெண்ணின எண்ணத்தையு மறியவல்லசக்தி நம் ஆசார்ய ஸார்வபௌமர்களுக் குண்டாகையாலே இவர்கள் அந்த அதிசங்கையை நன்கறிந்தவர்களாய், அவன் அதிஶங்கித்தானென்று சொல்வதிற்காட்டிலும் ஆழ்வாரையே அகன்றவராகவைத்துப்பேசினால் ரஸவத்தரமாகுமென்று திருவுள்ளம்பற்றி அதற்குச் சேர வியாக்கியானித்தருளினார்கள். இதுதானும் நாம் ஸ்வகபோலகல்பனையாக எழுதுமதன்று. * பரபரனுய்நின்ற வளவேழ்வைப்பாமித்யாதி சூர்ணையானது முதற்பத்தின் ஸாரார்த்தங்களை ஸங்க்ரஹித்தருளிச்செய்வது. அதில் * வளவேழுலகின் ப்ரமேயத்தை "புரையறக் கலந்து" என்றிவ்வளவேயான ஸ்ரீஸூக்தியினால் காட்டினார். அங்கு வியாக்கியானம் செய்தருளாநின்ற மணவாளமாமுனிகள் ஆழ்வாரை அகன்றவராகவைத்துப் பேசாமல் "அயோக்யதாநுஸந்தானத்தாலே தாங்களே அக்லவாரையும் தன் குணத்தைக்காட்டி அனுகப்பண்ணி அவர்களோடே புரையறக்கலக்கும் சீலவாந்" என்று பொதுவிலேயிட்டு அருளிச்செய்தார். * தளர்வுற்று நீங்கநினைமாறனை * என்று தாமே யருளிச்செய்ததைத் தாமே விவரித்தருளினாராயிற்று.

7. * வைகுந்தா மணிவண்ணனில் நாலாம் பாட்டுக்கு ஈட்டினவதாரிகை—
"* நாம் மருவிநன்கேத்தியுள்ளிவணங்கி நாம் மகிழ்ந்தாட * என்று தம்முடைய நைச்யத்தை யனுஸந்தித்தவாறே இவர் நம்மைவிடில் செய்வதென்? என்று அவன் அதிசங்கைபண்ண, நிர்ஹேதுகமாக உன்வடிவழகை நீயென்னையநுபவிப்பிக்க அநுபவித்து அத்தாலே சிதிலனான நான் உன்னைவிட ஸம்பாவனையுண்டோ வென்கிறார்"

என்றிருக்கையாலே இதையும் ஒரு தத்தாகக் கணக்கிட வேண்டாவோவென்பது ஒரு கேள்வி. இதற்கு மருள்தீரச் சொல்லுகிறோம். கடிநஜ்வராபிபூதனாயிருந்தவொருவனுக்கு ஜ்வரம் நிச்சேஷமாக நிவ்ருத்தமானபிறகும் ஸ்வல்ப குறிகளினால் மறுபடியும் இவனுக்கு ஜ்வரம் அநுவர்த்திக்கிறதோ' என்று பரம்பந்துக்கள் அதிசங்கிப்பது இயல்பு. இவ்வதிசங்கை எப்போதுமுண்டாகாது; ஜ்வரம்விட்ட புதுமையில் தானுண்டாகும். அதிசங்கித்தபடி உண்மையாகவே ஜ்வரம் அநுவர்த்தித்தாலும் அது பூர்வஜ்வரசேஷமாகக் கொள்ளப்படுமேயொழிய நூதந ஜ்வரமாக ஒருகாலும் கொள்ளப்படாது. இவ்வண்ணமாகவே இவ்விடத்தைப் பூருவர்கள் நிர்வஹித்துள்ளார்கள். எங்ஙனே யென்னில்; * வைகுந்தன் வந்து * என்ற திருவாய்மொழி நூற்றந்தாதிப் பாசுரத்தின் வியாக்கியானத்தில் பிள்ளை லோகஞ்சீயர் "இவர் * அல்லாவியென்று அகல நினைக்கிற நைச்யாநுஸந்தானத்தைக் கண்டு இது என்னாய் விளையக்கடவது! என்று ஈச்வரன் விசாரித்து அவன் சிதிலனாகிற ப்ரகாரத்தை தர்சித்து இப்படி என் விச்லேஷத்தில் அதி ஹீநவாயிருக்கிற உன்னை நான்

விடேனென்று—* உன்னை நான் பிடித்தேன்கொள் சிக்கனவே * உன்னை யெங்ஙனம் விடுகேன் * அந்தமிலடிமையடைந்தேன் விடுவேனோ * உன்னை நானடைந்தேன் விடுவேனோ * என்று ஈச்வரனைக் குறித்தருளிச்செய்ய '' என்று பணித்திருப்பதை உற்று நோக்கவேணும். இதனால் என்ன தேறுகிறது ? *வைகுந்தனில் * பிடித்தேன் * எங்ஙனம் விடுவேன் * விடுவேனோ * என வருமிடங்களையெல்லாம் ஒருசேரவெடுத்து ஏகவாக்யமாக்கி இவையித்தனையாலும் எம்பெருமானைத் தேற்றுவதாக நிர்வஹித்திருக்கையாலே இங்குத் தனித்தனி தத்து கிடையாதென்பது தேறிற்று. வைகுந்தாப்ரவேசத்தின் ஈட்டின் அடையவளைந்தானரும்பதவிளக்கத்திலும்—

* அல்லாவியுள்கலந்த * என்றும் * என் முடிவுகாணாதே யென்னுள் கலந்தானை * என்றும் ஆழ்வார் நைச்யாநுஸந்தானம் பண்ண அதனாலுண்டான அதிசங்கையைப் பரிஹரித்த பாசுரங்கள் (இவையிவை யென்று காட்டுகிறவர்)

'' ஸ்வாஶ்வாஸகா: * உன்னை நான் பிடித்தேன் கொள் சிக்கனவே *
*உன்னை யெங்ஙனம் விடுகேன் * உனதந்தமிலடிமையடைந்தேன்விடுவேனோ *
*தாய்தந்தையுயிராகின்றாய் உன்னைநானடைந்தேன்விடுவேனோ * ஊதி.

என்றெழுதியுள்ளார். ஆக இவற்றால் மற்றொருதத்தின் பரிஶங்கைக்கு ப்ரஸக்தி லேசமுமில்லை யென்று முடிந்தது. .... .... .... .... (*)

## நிகமனம்.



தத்து என்று எங்கே கொள்ளலாம்? அதற்கு என்ன லக்ஷணம் சொல்லலாமென்று ஆராய்ந்து ஶ்லோ ॥ ஸங்கோசஸ்ய ந சேதர்தாநுஸந்தாநம் ஸமே ஸம்பூர்தி। யத்ர வையாகுலீம் ஸைஷ தத்ர ஸூரிஸ் தத்துவாஶ்ரிதா ॥ என்று காரிகையிட்டோம். ஶ்லோ ॥ ஸங்கோசஸ்ய நியத்ர சேதர்தஸ்ய ஸம்பூர்ணதா:। ஸ்வதந்த்ரதி ச சேத்ர வி ஜ்ஞேயா தத்துவாஶ்ரிதா ॥ என்று பிறர்கருத்தின்படி கொள்ளில் நூற்றந்தாதியருளிச் செயலின்படி அபஸரணமே கிடையாதாகையாலே *வளவேழுலகுபதிகத்திலும் தத்து கிடையாதென்று முடிந்து நிற்கும் என்றும் ஆபத்தி கொடுத்திருக்கிறோம். இப்போது வ்யாக்யாதாக்கள் — ஸ்வஸ்யாவரிஹாராய ச ஹரிஸம்பந்த வஜ்ஜநம் । ஸ்வேநாவாஶ்யாஶ்ரயத்ராஸ்தி தத்ர ஸூரிஸ் தத்துவாஶ்ரிதா ॥ என்கிறார்கள். நாம் மேலேகொடுத்த ஆபத்திக்கு என்ன பரிஹாரமாயிற்றென்று பார்க்கவேணும். வளவேழுலகு பாட்டும் அதன் மேற்பாட்டும் குளகமன்றே. இரண்டு பாட்டும் தனித்தனியே அந்வயித்து முடியுமவைதானே. முதற்பாட்டில் தத்து இல்லை யென்று சொல்ல முடியாதே. ஆழ்வாருடைய மநோவாக்குக்களுக்கு ஹரிஸம்பந்தவர்ஜநம் அங்கு நிரூபிக்கமுடியுமா ? மூன்றாம் பாட்டிலுள்ள * திசைகளெல்லாம் திருவடியால் தாயோன் * என்பது இரண்டாம் பாட்டிலிருந்ததாகில்

அங்கு ஹரிஸம்பந்த வர்ஜநம் ஒருவாறு கல்பிக்கலாம். அப்படியில்லை. இந்தப் பற்றித் தீர விமர்சித்து ஸூத்ரம் வெளியிட ப்ராப்தமானால் இன்னமும் பலபல தத்துவங்களை வெளியிட அவகாசமும் பெற்றோமாவோம். .... ... (*)

* கோழிவெண்முட்டைக்கென் செய்வதெந்தாய்! குறுங்குடி நெடுங்கடல் வண்ணா! * என்ற திருமங்கையாழ்வாருளிச் செயலின்படி பிறருடைய அதிபல்பஜமான பேச்சுக்களுக்கு இத்தனைவிரிவு வேண்டாவாயிருந்தது. ஆனால் ஸ்வல்ப வ்யாஜத்தைக்கொண்டு ப்ரஸக்தாநுப்ரஸக்தமாக அநல்ப விஷயங்களை உபஹரிப்பது அடியேனுடைய இயல்பாதலால் ப்ரக்ருத விவாதத்தை ஒரு வியாஜமாகக்கொண்டு மூன்றுதத்தின் மூலஸ்தானமென்றும் * நைச்யாநுஸந்தானமென்றும் * ஆழ்வார் திகைப்பு என்று மிங்ஙனே மூன்று நால்களையியற்றிப் பலபல மருமங்களை விவரிக்க ப்ராப்தமாயிற்று. ப்ரக்ருத விஷயத்தைப்பற்றி ஸாரமாகத் தெரிவிக்கவேண்டியதிவ்வளவே. * வளவேழுலகில் இரண்டுதத்தென்பது அஸங்கதம். முதலில் ஒன்றிரண்டு பாட்டுக்களிலே உண்டான அருவினைநோய் மூன்றாவது பாட்டிலே நிச்சேஷமாக ஶாந்தமாகவில்லை. மூன்றாவது பாட்டின் ஈட்டின் முடிவிலே "கடுநடையிட்டோடுகிறவர் இவன் சீலகுணத்தை யநுஸந்தித்துக் கால்தாழ்கிறார்" என்றுள்ள சமத்காராதிசயசாலியான ஸ்ரீஸூக்தியினாலே கடுநடையிட்டோடுகை தவிர்ந்து ஓட்டத்திலே தாமதம்கொள்ளப்பட்டதென்று காட்டப்பட்டது. கால்தாழ்கிறார் என்றதன் பொருள் இதுவே. அடுத்தபாட்டினவதாரிகையில் * அவன் தன்னுடைய ஸௌசீல்ய குணத்தாலே என்னைவிடானென்று ஸமாஹிதராகிறாரென்றிருக்கையாலே ஆபிமுக்யத்திலே ஒருப்பாடு உண்டாகிறதென்று கொள்ளக்குறையில்லை. முறைக்காய்ச்சல் மறுமுறையும் அநுவர்த்திக்குமாபோலே இவ்வருவினைநோய் ஏழாம் பாட்டிலே மீண்டு மநுவர்த்தித்தது. எட்டாம் பாட்டிலே நிச்சேஷபரிஹாரமடைந்தது. ஒன்பதாம் பாட்டிலே தம் திருவாக்காலே * தம்மானென்னம்மான் அம்மா மூர்த்தியைச் சார்ந்து—மாயோம் * என்று நோயின் நிச்சேஷ நிவ்ருத்தியைத் தாமே கூறினர். "இனி அகன்று மாயக்கடவோமல்லோமென்கிறார்" என்பது ஈடு. ஆக வளவேழுலகில் ஒரு தத்தேயென்று தீர்ந்தது.

இனி, * அந்தாமத்தன்பிலே தத்து கிடையாதென்றதும் அஸங்கதம் * வளவேழுலகு பொருமாநீள்படையிலுங்காட்டில் அந்தாமத்தன்பில் தத்துதான் மிகப்ரபலமானது. முன்பதிகங்களில் ஆழ்வார் எம்பெருமானைவிட்டு அகன்றாரென்பதோ அகல நினைத்தாரென்பதோ ஆழ்வார் திருவாக்கிலிருந்து தெரிந்துகொள்ள வழியில்லை. இங்கேதான் அது ஸ்பஷ்டமாகத் தெரிந்துகொள்ளலாயிராநின்றது. சில ஸமயம் சந்த்ரக்ரஹணத்தில் ஹ்ரு ஷூ ஷூமயமென்று சொல்லப்படுவதுபோல அந்தாமத்தன்பு அருவினை நோயோடு தலைக்கட்டிவிட்டது. அதனால்தான் எம்பெருமா

னுக்கு அபரிமிதமான துக்கமுண்டாயிற்று. இவர் அடுத்த பதிகம் ஆரம்பிக்க
மாட்டார்போலிருக்கிறதே! யென்றெண்ணி மிகவும் அவஸந்நனானான். அந்த
அவஸாதத்தைக்கண்ட வாழ்வார், கீழே தாம் ஸாதாரணமாகப் பண்ணின நைச்யா
நுஸந்தானம் இவ்வளவு அனர்த்தத்திற்கு அடியாயிற்றேயென்று வருந்தி 'உன்னை
நான் விடேன், உன்னை நான் விடேன்' என்று பலகாலுமுரைத்து அவனுடைய
அவஸாதத்தையகற்றினார். இது பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளில் ஸுஸ்பஷ்டமாக
வுள்ள விஷயம். அப்ரஸக்த ப்ரதிஷேதம் கூடாமையாலே விடுகை ப்ரஸக்த மாயிற்
றென்று இசைந்துதீரவேணும். இது எம்பெருமானுடைய அதிசங்காநிபந்தநமாகவு
மாம், மெய்யே ஆழ்வாரிடத்திலுள்ளதாகவுமாம். விடுகை யென்பதும் அகலுகை
யென்பதும் பர்யாயமாகையாலே அது இங்கு உள்ளதென்று முடிந்திட்டது. இதில்
பிறர் சொல்லுவது, அகல்வரோவென்கிற சங்கையேயொழிய அகன்றமையில்லை
யென்று. கேளீர். வைகுந்தாமணி யென்பதாம் பாட்டில் * வானேறே யினியெங்
குப் போகின்றதே * என்றாராழ்வார். அதற்குமேல் எம்பெருமானுடைய வார்த்தை
யாகப் பத்தாம் பாட்டினவதாரிகையிலுள்ளது—"நாம் போகாதொழிகிறோம்; நீர்
நம்மை விடாதொழிய வேணுமே." என்று. இதனால் ஆழ்வார்விட்டகன்று
ரென்கிற நிர்வேதம் எம்பெருமானுக்குள்ளதென்று பிறருடைய கருத்தின்படியும்
தேறுகிறது. இவ்வளவு போதும். ... ... .... ... (*)

ஶ்லோ ॥ [illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥
[illegible] ।
[illegible] ॥
[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய
ஆசார்ய ஹ்ருதயபாட பரிஷ்காரத்தில் ஆழ்வார்திகைப்பு
முற்றிற்று.

Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

கிடைக்குமிடம் :—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

(2) கீராலபாடி ராதாகிருஷ்ணய்யா,
229, கோவிந்தப்ப நாயகன் தெரு, மதராஸ்—1.

(3) G. ரங்கைய நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்ரிபேட்டை, மதராஸ்—2.

(இவர் சென்னையில் பிரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)

If un-delivered please return to:

P. B. ANNANGARACHARYAR,
L. KANCHEEPURAM.




129. The Principal,
Sanskrit College,
MELKOTE (MYSORE STATE)

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, Chinna Kancheepuram.